# தீக்கதிர்



கதிர் 7] 23—11—69 கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) வார ஏடு காசுகள் 25 [மலர் 10

# காங்கிரஸ் அழிவுப் படலம்!

## பலப் பரீட்சையின் முதல் கட்டத்தில்

## சிண்டிகேட் தோல்வி! பிளவின் விளைவுகள் என்ன?

### தோழர் பி. இராமமூர்த்தி தெளிவுரை

**காங்கிரஸ் சிண்டிகேட் கோஷ்டிக்கும் இந்திரா காந்தி கோஷ்டிக்கும் இடையே போராட்டம் நடந்து பலப் பரீட்சையும் முடிந்து விட்டது.**

**எந்த ஜனசங்கம், சுதந்திராவுக்கும் தங்களுக்கும் இடையே உறவு இல்லையென்று கூறினார்களோ, அதே கட்சிகளுடன் பகிரங்கமாகச் சேர்ந்து நின்று தங்கள் கட்சியின் பிரதமரான இந்திரா காந்தியைத் தோற்கடிக்க சிண்டிகேட் காங்கிரஸ்காரர்கள் படுகேவலமான சூழ்ச்சிகளில் இறங்கி படுதோல்வி கண்டார்கள்.**

ரபாத் முஸ்லிம் மாநாட்டில் இந்தியா கலந்து கொண்டதற்காக இந்திரா அரசு மீது கண்டனத் தீர்மானத்தைசுதந்திராக்கட்சிகொண்டுவந்தது இத் தீர்மானத்திற்கு ஆதரவாக 146 பேரும் எதிர்த்து 308 உறுப்பினாகளும் வாக்களித்ததால் அந்தத் தீர்மானம் படுதோல்வி கண்டது

இந்த 144 பேரும் யார், யார்? தமிழ்நாட்டு ஜனநாயக சோசலிசச் சிற்பி,கர்மவீரர், பெருந்தலைவர்காமராசர், பெருந்தலைவர்கள் மொரார்ஜிதேசாய் எஸ்.கே பட்டீல். டாக்டர் ராம்சுபாக்சிங் ஆகியோர் உள்ளிட்டு காங்கிரசிலிருந்து பிரிந்து சென்ற 57 பேரும். 17 பி எஸ். பி. யினரில் 12 பேரும், 17 எஸ் எஸ் பி யினரில் 12 பேரும், 39 சுதந்திராக்களில் 31 பேரும், ஜனசங்கத்தினரும், பி. கே டி யினரும் ஆவர்

இந்தத் தீர்மானத்தை எதிர்த்து முழுமையாக வாக்களித்தவர்கள் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும், வலதுசாரிக் கம்யூனிஸ்ட் கட்சியும், தி. மு. க வுமாகும். சிண்டிகேட் அல்லாத ஏனைய காங்கிரசாரும் சுயேச்சையாளரும் வாக்களித்தனர்.

சிண்டிகேட், சுதந்திரா, ஜனசங்கத்தின் முதல் சதி இவ்வாறு முறியடிக்கப்பட்டது காங்கிரஸ் பிளவுபட்டது இதிலிருந்து உறுதியாகிவிட்டது. இதன் விளைவுகள் என்ன?

**டெல்லியிலிருந்து நவ. 15-ஆம் தேதியிட்ட 'மெயினஸ்டிரீம்' என்ற ஆங்கில ஏட்டில் தோழர் பி. இராமமூர்த்தி எழுதியுள்ள கட்டுரையின் முழு வாசகம் பின்வருமாறு:—**

காங்கிரஸ் கட்சிக்குள் தற்போது ஏற்பட்டிருக்கும் பிளவை கடந்த சில வருடங்களாக நம் நாட்டில் ஆழமாகிக்கொண்டு வரும் பொதுப் பொருளாதார நெருக்கடியின் பின்னால் நாம பார்க்க வேண்டும். கடந்த 22-வருடங்களாக காங்கிரஸ் அரசாங்கம் பின்பற்றி வரும் கொள்கைகளின் விளைவே இந்த நெருக்கடி. இதைக் காங்கிரசால் தவிர்க்க முடியவில்லை.

காங்கிரசின் கொள்கைகளின் அடிப்படை என்ன? இந்த நாட்டில் அந்நிய உதவியின் மூலம் தொழில்களை வளர்க்க முயற்சிப்பதாகும். இந்த உதவியின் பெரும் பகுதி மேற்கத்திய ஏகாதிபத்திய நாடுகளிடமிருந்தும் குறிப்பாக அமெரிக்காவிடமிருந்தும் பெறப்படுகிறது.

கிராமப்புறங்களில் நிலப்பிரபுத்துவ உறவுகளை நொறுக்காமல் அப்படியே அவைகளை வைத்துத்துக்கொண்டும் தனியார் துறையில் அந்நிய முதலாளிகளுடன் கூட்டு ஒப்பந்தங்கள் செய்துகொண்டும் தொழில்களை வளர்க்க முயற்சிக்கப்படுகிறது.

### இடை வெளி

அதனால்தான் காங்கிரஸ் அரசாங்கம் கொடுத்த வாக்குறுதிகளுக்கும் செயல்களுக்கும் பெரும் இடை வெளியிருப்பதைப்பார்க்கிறோம்.

காங்கிரஸ் அரசாங்கம் பின்பற்றி வந்த கொள்கைகளால் ஒரு சிலஏகபோகவாதிகளின் கைகளில் செல்வமும் பொருளாதார சக்தியும் குவிந்துள்ளன. தற்போதிருக்கும் தொழில்களை நடத்துவதற்குக் கூட ஏகாதிபத்திய நாடுகளிடமிருந்து உதவியை எதிர்பார்க்கும சார்பு நிலை அதிகரித்துளளது. மறுபக்கத்தில் கோடானு கோடி மக்கள்



ஒட்டாண்டியாகி வருகிறார்கள்.

இந்த நிலைமைதான் மக்களிடையேபெரும்வெறுப்புணர்ச்சியை வளர்த்தது. அது 1967-ம் ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் வெளிப்பட்டது. பல மாநிலங்களில் காங்கிரஸ் கட்சி முறியடிக்கப்பட்டது. இந்தத் தோல்வியிலிருந்து ஆளும் காங்கிரஸ் கடசியின் தலைமை எந்தப் பாடத்தையும் கற்கத் தயாராக இல்லை. மேற்கூறிய அதே அடிப்படைக் கொள்கைகளையேதொடர்ந்து பின்பற்றினர்கள்.

மறுபுறத்தில் மக்களின் நிலை என்ன? மக்களது அரசியல் உணர்வின் மட்டமும் காங்கிரஸ் எதிர்ப்புணர்ச்சி என்ற அளவுக்குத் தான் வளர்ந்திருந்தது என்பதையும் குறிப்பிடுவது அவசியம். வெவ்வேறு அரசியல் கட்சிகளின் அரசியல் போக்குகளை மக்கள் பகுத்துப் பார்க்கவில்லை.

ஆனால் கடந்த பொதுத் தேர்தலுக்குப் பின் சென்ற இரண்டரை வருட காலத்தில் அரசியல் நிகழ்ச்சிகள் மிகவும் துரிதமாக நிகழ்ந்துள்ளன. இன்று ஆழமாகிவரும நெருக்கடி, நாடு மேலும் வளர்ச்சி பாதையில் முன்னேற வேண்டுமானால மாற்றுக் கொள்கைகளைப் பின்பறற வேண்டியதின் அவசியத்தை மக்கள் முன் வைத்துள்ளது. இன்று தோன்றும் பிரச்னைகள் ஒவ்வொன்றிலும் எதிர்க் கட்சிகள் வெளிப்படையான நிலை எடுத்து மக்களின் முன் தங்களுடைய சுயரூபத்தைக் காட்ட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது.

இந்த நாட்டின் ஜனநாயக இயக்கம் மேலும் வளர்ந்து முன்னேறும் சரியான வழியை, கேரளத்திலும் மேற்கு வங்கத்திலும் அமைந்த இரு அரசுகளும் பின்பற்றிய கொள்கைகள முன் வைத்தன நெருக்கடியின் சுமையை மக்கள்மீது சுமத்தப்பார்க்கும் முதலாளி வர்க்கத்தின் முயற்சிகளுக்கு எதிரான வழிமுறை இது. தொழிலாளி வர்க்கமும் விவசாய மக்களும் மத்தியதர வர்க்கமும் நடத்தும் போராட்டங்களுக்கு இந்த இரு அரசுகளும் பின்பற்றிய கொள்கை ஊக்கமளித்தது. இந்தப் போராட்டங்களை நசுக்க இந்த இரு அரசுகளும் போலீசை அனுப்ப மறுத்தது. முதலாளி வர்க்கத்தின் வர்க்க விரோத முயற்சிகளைத் தகர்ப்பதில் பிரதான அம்சமாக இந்த மாற்றுக்கொள்கைதிகழ்ந்தது.

### பிற்போக்கு சக்திகளின் தாக்குதல்

இந்த இரு அரசாங்கங்களும் பின்பற்றிய கொள்கைகளைத் தான் ஜனசங்கமும், சுதந்திரா கட்சியும தாக்கின. இந்த அரசாங்கங்களை அகற்ற வேண்டும் என்றும் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யைத் தடை செய்யவேண்டும் என்றும் அந்த இரு கட்சிகளும் கோரின.

தொடக்கத்தில் காங்கிரஸ் கட்சியின் தலைமையும் சட்டரீதியாக அமைக்கப்பட்ட மேற்குவங்க அரசாங்கத்தைக் கவிழ்த்து இதை நிறைவேற்ற முயற்சித்தது என்றாலும் மக்களது மாபெரும் எதிர்ப்புக்கு முன்னால் இந்த முயற்சி

(4-ஆம் பக்கம் பார்க்க)

தீக்கதிர்

# கேரளத் துரோகமும் சர்வதேச திருத்தல் வாதமும்

ஜெர்மன் ஜனநாயகக் குடியரசின் வானொலியான பெர்லின் வானொலிநிலையம், கேரளத்தில் ஐ மு அமைச்சரவை கவிழ்வதற்குக் காரணம் மார்க்சிஸ்டுகள்தாம் என்று கூறியுள்ளதாகச் செய்தியொன்றை ஜனசக்தி (16-11-69-ல்) வெளியிட்டுள்ளது.

இந்தியத் திருத்தல் வாதிகள் தங்களது துரோகத் தனத்தை மூடிமறைக்க இதைப் பயன்படுத்திக் கொள்ள முயல்கிறார்கள்.

செக்கோஸ்லோவேகியாவில் திருத்தல் வாதம் தலைக் கேறி, அங்கு சோசலிச அமைப்பே தகர்ந்து தரைமட்டமாகிற நிலையில் அதைப் பாதுகாக்க கிழக்கு ஜெர்மனி உட்பட்ட வார்சா ஒப்பந்த நாடுகள் முன்வந்த பொழுது அதைக் கண்டனம் செய்தவர்கள் இந்தியத் திருத்தல் வாதிகள்.

எனவே தங்களது சந்தர்ப்பவாத சாகசங்களுக்கு இன்று கிழக்கு ஜெர்மனி வானொலிச் செய்தியொன்றையும் இந்தியத்திருத்தல்வாதிகள் பயன்படுத்திக்கொள்வதில் ஆச்சரியமொன்றுமில்லை. பெர்லின் வானொலியில் வந்ததாகக் கூறப்படும் செய்தி உண்மையானால் ........

முதலாளிவர்க்கத்திற்கும் நிலச்சுவான்தார்களுக்கும் சென்ற பல ஆண்டுகளாக இந்திய வலது கம்யூனிஸ்டுகள் பணியாற்றிவரும் உண்மை பெர்லின்ரேடியோவுக்குத் தெரியாமல் இருக்கலாம் ஆனால் கேரள விவசாயிகளுக்கும் உழைப்பாளிகளுக்கும் இது தெரியாத விஷயமல்ல; புரியாத ஒன்றுமல்ல!

குட்டநாடு விவசாயிகளது வயிற்றிலடிக்கடிராக்டர்களைப் புகுத்த எம். என். கோவிந்தன்நாயர் செய்த துரோகமும், இடிக்கி புரொஜெக்ட் தொழிலாளர்களுக்குச் செய்த துரோகமும் பெர்லின்ரேடியோவுக்குவேண்டுமானால் ஒருகால் தெரியாமலிருக்கலாம். ஆனால் கேரள மக்களுக்கு நன்கு தெரியும்; புரியும்.

கிழக்கு பெர்லின் ரேடியோவின் தவறான ஒலிபரப்பையும் பயன்படுத்தி வலதுகம்யூனிஸ்டுகள் கேரளத்தில் தாங்கள் புரிந்த சந்தர்ப்பவாதச் சதிகளை மூடிமறைத்து விடலாம் என எண்ணுகிறார்கள்.

1962—ல் மாஸ்கோ ரேடியோவும் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் ஏடும் திருத்தல வாதத்தை எதிர்த்து இந்தியககம்யூனிஸ்ட்கட்சியில் நடந்த போராட்டத்தின் உண்மைநிலைகளைப் புரிந்துகொள்ளாமல் — தெரிந்து கொள்ள விரும்பாமல்—இங்கிருந்த திருத்தல்வாதிகளுக்கு ஆதரவளித்ததை இவர்கள் பயன்படுத்தியது போல், இன்றும் தங்களது சர்வதேசிய திருத்தல்வாத உறவுகளைப் பயன்படுத்திக் கொண்டு இந்தியத்தொழிலாளிவர்க்கத்திற்குத் தொடர்ந்து தங்களது துரோகங்களைப் புரியலாம் என்று எண்ணுகிறார்கள்.

62-ல் பிளவுவாதிகள், ஓடுகாலிகள் என்று சர்வதேசியத் திருத்தல்வாதிகள் இங்குள்ள மார்க்சிஸ்டுகளை தூற்றிய பிறகுதான் இந்த நாட்டுத் தொழிலாளிமக்கள் கேரளத்திலும், வங்கத்திலும் கம்யூனிஸ்டு(மார்க்சிஸ்டு) கட்சிதான் உண்மையான மார்க்சிச—லெனினிச இயக்கம் என்பதை நிலைநாட்டினர்.

இந்த உண்மையை வெளியில் உள்ளவர்கள் தெரிந்து கொள்ளாததில்—தெரிந்து கொள்ள விரும்பாததில் நமக்கு ஆச்சரியமில்லை காரணம், இந்தியாவுக்கு வெளியில் உள்ள திருத்தல்வாதிகள் பண்டித நேருவுக்கும், அதன் பிறகு லால்பகதூர் சாஸ்திரிக்கும் அதற்கும் பிறகு தற்போது இந்திராகாந்திக்கும் ஜே' போடுவதுதான் மார்க்சிசம் என்று சொல்லிக்கொடுத்து வருகிறார்கள். அதையே இந்தியத்திருத்தல் வாதிகளும் பின்பற்றி வருகின்றனர். விளைவு?

திருத்தல்வாதிகளை எந்த இடத்தில் வைக்கவேண்டுமோ அந்த இடத்தில் இந்தியத் தொழிலாளிவர்க்கம் வைத்துள்ளது!

சர்வதேசிய மார்க்சியப்புரட்டர்கள் துரோகிகள் பட்டியலில்:இவர்களையும் சேர்த்து வைத்தே படிக்கிறது.

வெகு காலமாக இந்தியநாட்டில் எங்கே ஆழமாக கம்யூனிஸ்டு இயக்கம் வேரூன்றி வளர்ந்து வந்ததோ அந்த இடங்களில் (மேற்குவங்கம், கேரளம்) மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிதான் உண்மையான மார்க்சிச—லெனினிச கட்சி என்பதை நடைமுறை எடுத்துக்காட்டியது. இது இந்தியத் திருத்தல் வாதத்திற்கு மட்டுமல்ல; சர்வதேசத் திருத்தல் வாதத்திற்கும் தரப்பட்ட பால பாடம்.

இந்த நடைமுறை அநுபவங்களை யெல்லாம் படிக்க விரும்பாத வெளியில்,உள்ள திருத்தல் வாதிகள், கேரளத்தில் வலது கம்யூனிஸ்டுகள் செய்துள்ள துரோகத்தைப் புரிந்து கொள்ள மறுத்து இந்தப் பூர்ஷுவாத் தொங்குசதைகளுக்கு சிம்பு வைத்துக் கட்ட முன்வந்துள்ளார்கள்.

65 லும், 67 லும் கேரளமக்கள் சர்வதேசத் திருத்தல் வாதிகளுக்குத் தந்த அந்தச்சரியான பாடத்தை மீண்டும் தரப்போகிறார்கள் என்பதில் அவர்களுக்கும் அவர்களது இந்தியச் சீடர்களுக்கும் சந்தேகம்வேண்டாம். பதவியிலிருந்த போது ஈ.எம்.எஸ் கூட்டங்களுக்கும், மார்க்சிஸ்ட் கட்சி ஆர்ப்பாட்டங்களுக்கும்,போராட்டங்களுக்கும் மக்கள் திரண்டதைவிட இன்று பதவியிலிருந்து வெளியேறியபிறகு மக்கள் இருமடங்கு மூன்று மடங்கு திரளுவதே (முதலாளித்துவ ஏடுகள் கூட இந்த விபரங்களை வெளியிடாமல் இருக்கமுடியவில்லை) "யானைவரும் பின்னே மணி ஓசைவரும் முன்னே" என்பது போன்ற அறிவிப்பாகும்.

# கண்ணீர் சிந்தும் மண்வளப் பாதுகாப்பு துணை உதவியாளர் நிலை

## பசியறியாதவரின் உபதேசம்

தமிழ்நாடு மண்வளப் பாதுகாப்பு துணை உதவியாளர் சங்க 5-வது மாநில மாநாடு திருச்சி நகரில் கடந்த அக்டோபர் 11, 12 தேதிகளில் நடைபெற்றது. அமைச்சர் திருமதி. சத்தியவாணிமுத்து இம் மாநாட்டில் கலந்து கொண்டார். அவருக்கு ஒரு வரவேற்பு இதழும் வாசித்துக் கொடுக்கப்பட்டது. அதில், அமைச்சரை பல வழிகளாலும் ஏற்றிப்போற்றி புகழுரைகள் கூறியபின், தங்கள் வெந்துயர்களை கல்லும் உருக, கரும்பாம்பும் நெஞ்சிளக விரிவாக விளக்கிவிட்டு தங்கள் கோரிக்கைகளைப் பரிவுடன் பரிசிலித்து கருணை காட்டுமாறு நலிவுற்ற வாழ்வில் ஒளிமிக்க விளக்கேற்றுமாறும் கண்ணீர் சிந்தி வேண்டிக்கொண்டார்கள்.

அதற்கு அம்மையார் தந்த பதில் என்ன? "வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்கத்தான் இதுபோன்ற பதவிகளை ஏற்படுத்தியதாகவும், அப்பொழுதுஅப்பதவிகளின் எதிர் காலததைப்பற்றி கணக்கிலெடுப்பதில்லையென்றும்,பதவி உயர்வு சம்பள உயர்வு நிச்சயம் உண்டு என்று சொல்லுவதற்கில்லையென்றும், இப்போது பொறியியல் பட்டதாரிகள் கூட வேலையில்லாமல் திண்டாடுகிறார்கள் என்றும், உங்களுடைய கோரிக்கை சம்பந்தமாக நிதி நிலைமையை ஆராய்ந்தபிறகுதான் சொல்ல முடியும் என்றும் கூறி முடித்தாராம்.

### கேட்பது என்ன?

மண்வளப்பாதுகாப்பு துணை உதவியாளர் வேலைக்கு அரசினரே பயிற்சியளித்தனர். பயிற்சிபெற்ற பிறகு பலருக்கு பதவி தராததால், பல ஆண்டுகள் வரையும் வேலை கிடைக்கும்' என்று எதிர்பார்த்து ஏமாந்த இருவர் தற்கொலை செய்துகொண்டு விட்டனர்.

ஆகவே, பயிற்சிபெற்ற 120 பேர்களுக்கு உடனே வேலை கொடுக்கவேண்டுமென்று வேண்டினர்.

அடுத்த கோரிக்கை பதவியில் அமர்ந்தவர்கள் 10 ஆண்டுகளாக வேலை பார்த்திருக்கிறார்கள். மண்வள ஆராய்ச்சிகள் செய்து பசுமைப் புரட்சிக்கு உதவியிருக்கிறார்கள். அவர்களுடைய கல்வித் தகுதி உள்ள இதர பிரிவுகளில்—அதாவது, கால்நடை பராமரிப்பு, கிராம சேவக், காவல்துறை, ரெவினியூ இலாகா கிளார்க்குகள், கூட்டுறவு இலாகா, மீன்துறை, இதே விவசாய இலாகாவில் பீல்டுமென்கள், ஆகியவர்களுக்கெல்லாம் இருப்பது போல—இவர்களுக்கும் பதவி உயர்வு தரவேண்டுமென்றும் கடந்த 9 ஆண்டுகளாக பதவி உயர்வோ சம்பள உயர்வோ இல்லாமல் இருப்பதாகவும் தெரிவித்தார்கள்.

மற்றும் இப்போதைய 20 ரூபாய் டயணப்படியை. விலைவாசிகள் அதிகரித்துவிட்டதால் 35 ரூபாயாக உயர்த்த வேண்டுமென்று கோரினர்.

அதற்குத்தான் அம்மையார் அப்படி பதில் அளித்தார்.

மற்றும் கோட்டப் பொறியாளர் திரு சவரிமுத்து, திரு. எம். எஸ். மணி எம். எல். ஏ. திரு. டி ஜி ராமலிங்கம், திரு. என். நாராயணசாமி ஆகியோர், கோரிக்கைகளை ஆதரித்துப் பேசினார்கள்.

### பசி அறியாதவர் உபதேசிக்கிறார்

மாநாட்டுக்குத் தலைமை வகித்த வேளாண்மை இணை இயக்குநர் திரு. என். சங்கர நாராயணரெட்டியும் பேசினார் என்ன பேசினார்?

"வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க உங்களுக்கு வேலை கொடுத்தோம். நீங்கள் என்ன செய்ய வேண்டும்? இன்னும் அதிகமான வேலை செய்வதற்கு என்ன வாய்ப்புகள் இருக்கின்றன என்பதைப்பற்றி உங்கள் சங்கத்தில் விவாதம் செய்வதைவிட்டுவிட்டு, மேசை நாற்காலி வேண்டுமென்றும், பயணப்படி உயர்வு வேண்டுமென்றும் கேட்பது சரியல்ல. சங்கம் வைப்பது இதற்குத்தானா? பி இ. படித்த பொறியியல் பட்டதாரிகளே வேலையில்லாமல் திண்டாடுகிறார்கள். அப்படியிருக்கக்கூடிய காலத்தில், நீங்கள் சம்பள உயர்வு கேட்பது சரியா? எல்லாம் நிதி நிலைமையைத் தெரிந்த பிறகுதான் உத்திரவு வழங்கப்படும்" என்று பேசினார்.

### இவர் சங்கதி

இப்படி உபதேசித்த இவர் சங்கதி என்ன? பி. இ. படித்து பதவியில் அமர்ந்தபோது ரூ. 210 சம்பளம்—அப்புறம் பதவி உயர்வு ரூ. 350 சம்பளம் அப்புறம் 600; பிறகு 900. மாதச் சம்பளம் 1500க்கு குறையாமல்.

அரசாங்கச் செலவில் அமெரிக்கா பயணம்... கார், ரயிலில் முதல் வகுப்பு, விமான பயணம் இப்படி எத்தனையோ வசதிகள்!

### கண்ணீர் சிந்துகிறோம்

மாநாட்டு நன்றி உரை நிகழ்த்திய சங்கத்தலைவர் திரு. பி. முத்துச்சாமி பேசுகையில், வேளாண்மைத் துறை இயக்குநரின் பேச்சுக்கு வருத்தம் தெரிவித்தார் 'நம்பிய எங்களை, நட்டாற்றில் விடலாமா? மீண்டும் உங்களைக் கண்ணீர் சிந்தி, அடிபணிந்து கேட்கிறோம், பதவி உயர்வு தாருங்கள்" என்று வேண்டுகோள் விட்டார்.

———

# சத்துவாச்சாரியில் பி.ஆர். மணி விழா

. வேலூர், சத்துவாச்சாரியில் பீடித் தொழிலாளர்கள் சார்பில் 6-11-69-ந் தேதி தோழர் கே. சீனிவாசன் தலைமையில் தொழிலாளி வர்க்கத்தின் ஒப்பற்ற தலைவர் தோழர் பி. இராமமூர்த்தி எம். பி. அவர்களின் மணிவிழாவும் சர்வகட்சியினர் கலந்துகொண்ட பொதுக்கூட்டமும் நடைபெற்றது. தோழர்கள் வி. எஸ். சிவராமன், சங்கரன் (மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி) எஸ். எஸ். மணி(தி.மு.க), சாமிசம்மாரன். (தி. ). ராமமூர்த்தி (குடியரசு) எல்லப்பன் (சீனிவாசராவ் மன்றம்) ஆகியோர் தோழர் பி. ஆர். அவர்களின் சேவைகளையும், தியாகங்களையும் பற்றிவிரிவாகப் பேசினார்கள். பல இடங்களில் செங்கொடி ஏற்றப்பட்டு தோரணங்களால் ஊர் முழுவதும் நன்கு அலங்கரிக்கட்டிருந்தது.

# விவசாய நெருக்கடி தீராமல்

# பொருளாதார சார்புநிலை மாறாது

**அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் 20-வது மாநாடு போசுலில் அக். 30. டிச. 1, 2 தேதிகளில் நடைபெற்றபோது விவசாய நெருக்கடி பற்றி கீழ்க்கண்ட தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.**

நாட்டின் விவசாய நெருக்கடியின் வெவ்வேறு அம்சங்களை ஆராய்ந்து அகில இந்திய விவசாயிகள் சங்க 19-வது மாநாடு கீழ்வருமாறு கூறிற்று "விவசாய நெருக்கடி இன்று நாட்டின் தலையாயப் பிரச்னையாக மாறியுள்ளது இந்தப் பிரச்னையைத் தீர்க்காமல் உணவு தானியங்களிலும் தொழிற்சாலைகளுக்குத்தேவையான விவசாயக் கச்சாப் பொருள்களிலும் தன்னிறைவு பெறும் இலட்சியத்தை நாடு எய்திட முடியாது. விவசாய நெருக்கடியைத் தீர்க்காமலும், நிலப்பிரபுத்துவத்தை ஒழித்து விவசாயத் தொழிலாளர்களுக்கும் ஏழை விவசாயிகளுக்கும் நிலத்தை வினியோகிக்காமலும், இலட்சோப லட்சக்கணக்கான கிராமப்புற ஏழை மக்களின தற்போதைய துயரம் நிறைந்த வாழ்க்கையையும் பசிப்பிணியையும் போககாமலும் வளரும் நாட்டின் தொழிலகளுக்குப் பயனுறும் முறையில் உள்நாடடுச் சந்தையைப்பெருக்க முடியாது. கிராமப்புற மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தாமல் அவர்களுடைய கலாசார கல்வித்தரததை உயர்த்த முடியாது. நம்முடைய நீண்டகால பின் தங்கிய நிலையைப் போக்கவும் முடியாது. நம்முடைய தேசிய வருமானத்தின் பாதிக்கு விவசாயத்துறையே பொறுபபாக இருககும் நிலையில் விவசாய உற்பத்திக்குத் தடங்களாகவுள்ள தடைகளை அகற்றி துரிதமாக முன்னேறினலைறி நம்முடைய பொருளாதாரம எலலாத் துறைகளிலும துரித வளர்ச்சியடைய போதிய சேமிப்பைத்திரட்ட முடியாது."

விகிதம் உள்ளது. 40 ஏக்கருக்கு மேல் வைத்திருக்கும் ஒரு சதவிகிதத்தினரிடம் மொத்த நிலப்பரப்பில் 20 சதவிகிதத்துக்கு மேலுள்ளது.

காங்கிரஸ் அரசாங்கங்கள் இயற்றிய நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் முற்றும் தோல்வியடைந்து விட்டன என்பது இப்போது அனைவரும் ஒப்புக்கொள்ளும் உண்மையாகும். நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் நகலில் கீழ்வருமாறு கூறப்பட்டுள்ளது." திட்டமிட்டரீதியில் நிலமற்றவர்களுக்கு நியாயமான விலையில் நிலத்தைக் கொடுக்க வேண்டும் என்ற உச்சவரம்பின் பிரதான இலட்சியம் பெரிதும் தோல்வியடைந்து விட்டது"

இது நிலைமையை குறைத்து மதிப்பிட்டிருப்பதாகும். நிலப்பிரபுக்கள் ஆதிக்கம் செலுத்திய மாநில அரசுகள் உண்மையான நிலச்சீர்திருத்தத்தை அமுலாக்குவதில் கொஞ்சமும் அக்கறை செலுத்தவில்லை. ஆகவே அவர்கள்இந்தச்சட்டங்களில் வேண்டுமென்றே ஓட்டைகளை வைதது அவற்றைப் பயன்படுத்தி நிலப்பிரபுக்கள் உச்சவரம்பிலிருந்து தப்பிக்க அனுமதித்தார்கள். சொந்தச் சகுபடி, நனகு நிர்வகிக்கப்பட்ட பண்ணைகள், நிலமாற்றங்கள், போலிக் கூட்டுறவுகள் பினாமிமாற்றங்கள் முதலியஎல்லாவிதயுக்திகளின்மூலமும்உச்சவரம்புச் சட்டத்திலிருந்து தப்பித்தார்கள். இதன் விளைவாக அற்பசொற்பமானஉபரிநிலமே கிடைத்தது. ஆனல் இந்தச் சொற்ப உபரி நிலமும் விவசாயத் தொழிலாளர்களுக்கும் ஏழை விவசாயிகளுக்கும் வினியோகிக்கப்படவில்லை. இதன் பெரும் பகுதி இன்னமும் நிலப்பிரபுக்களின கைகளிலேயே இருக்கிறது. மத்திய உணவு, விவசாய அமைச்சரகம் தொகுததுள்ள சமீபப் புள்ளி விவரங்கள், உச்சவரம்பு விதிக்கப்பட்டதையடுத்து உபரி நிலம் என்று அறிவிக்கப்பட்ட 9 லட்சஹெகடர் நிலத்தில் 4 2 இலட்சம் ஹெக்டர் நிலமே வினியோகிககப் படடிருப்பதை காட்டுகின்றன.

இதைப் போலவே நில வினியோகம்பற்றிபெரிதாகப்பேசப் பட்டாலும் முதலாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்திலிருந்து சென்ற வருட முடிவு வரை விவசாயத் தொழிலாளர்களுக்கும் நிலமில்லாதவிவசாயிகளுக்கும் மொத்தம்1கோடியே 90 இலட்சம் ஹெக்டர்பயிரிடக் கூடிய தரிசு நிலத்தில்4.5 இலட்சம் ஹெக்டர் நிலமே வினியோகிக்கப்பட்டிருக்கிறது.

## நிலக் குவியல்

பொருளாதார நெருக்கடி முற்றிவரும் நிலையில் நாட்டின விவசாயத்தில் ஏற்பட்டுளள கடுமையான நெருக்கடியும் மேலும் தீவிரமடைநதுள்ளது. இநத நெருக்கடியின் அடிப்படையில் உற்பத்தி உறவுகள் அமைந்துளளன.

இந்தியாவின் கிராமப் புறங்களில் 74 சதவிகிதக் குடும்பங்களுக்கு நிலமே இல்லாமலும் அல்லது 5 ஏக்கருக்கும் குறைவாக நிலமும் இருக்கிறது. அவர்களிடம் இருக்கும் நிலம் மொத்தப்பரப்பில 16 சதவிகிதமேயாகும். அதே சமயத்தில் 30 ஏக்கருக்கும் அதற்கு மேலாகவும் நிலம வைத்திருக்கும் 2·5 சதவிகிதத்தினரிடம் மொத்த நிலப்பரப்பில் 28 சத

## நிலவெளியேற்றம்

குத்தகைதாரருக்குக் குத்தகை உரிமையை உறுதிப்படுத்தும் சீர்திருத்தங்கள் என்று கூறப்படுவதுகூட பெருமளவில் குத்தகைதாரரைவெளியேற்றுவதில்தான் முடிந்திருக்கிறது. நிலமற்ற தொழிலாளர் பட்டாளம் பெருகியுள்ளது.தொழிலாளர் தேசியக் கமிஷன் தன்னுடைய அறிக்கையில் கீழ்வருமாறு கூறியுள்ளது:—

"நேரடிச் சாகுபடிக்கு நிலத்தை எடுத்துச்கொள்வதையடுத்து நிலத்திலிருந்து குத்தகைதாரர் வெளியேற்றப்படுவது இப்போது அதிகரித்து வருகிறது. நிலமற்ற தொழிலாளி குடியிருப்பதற்கு வைத்திருக்கும் வீட்டுமனையை வழங்கும் சட்டம்கூட எல்லா மாநிலங்களிலும் ஒரே மாதிரி அமுலாக்கப்படவில்லை. நிலவுடைமைக்கு உச்சவரம்பு குடும்ப அடிப்படையில் செய்யப்படவில்லை. இதில் அளிக்கப்பட்டுள்ள விதிவிலக்கும் குறுக்கு வழியில் தப்பித்துக்கொள்ளுவதற்கு வகை செய்கிறது. ஒரு சிலர் கைகளிலேயே இருக்கும நிலக்குவியல் அகற்றப்படவில்லை"

விவசாயத் தொழிலாளர் எண்ணிக்கை 1951-52-ல் 2 கோடியே 75 லட்சத்திலிருந்து 1961-62-ல் 3 கோடியே 15 லட்சமாக உயர்ந்துள்ளதையும் கமிஷன் அறிக்கை காட்டுகிறது, இந்த மறுக்க முடியாத உண்மைகளின் முன் காங்கிரஸ் அரசாங்கம் இயற்றிய நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் தோல்வியடைந்துள்ளனஎன்றுஒப்புக் கொள்ள நேரிட்டதில் ஆச்சரியமில்லை

## ஏழை விவசாயிகள் புறக்கணிப் படுகின்றனர்

விவசாய உற்பத்தியைப் பெருக்குவதற்காக கடந்த 22-வருடங்களில் காங்கிரஸ் அரசாங்கம் கோடிக்கணக்கான ரூபாய்களைக் கொட்டியுள்ளது, எனினும் இதனல் பலனடைந்தவர்கள் பெரு நிலப்பிரபுக்களும் பணக்கார விவசாயிகளுமேயாவர். இதைத்திட்டக் கமிஷன் குழுவே ஒப்புக்கொண்டுள்ளது. 1961—62ல் மொத்தமுள்ள ஏழரை கோடி நிலவுடைமையாளர்களில் 75 சதவிகிதம் பேர் 3 ஹெக்டர் நிலததுக்கும் குறைவாக வைத்துள்ளனர். அவர்கள்மொத்தம் பயிரிடும் நிலத்தில் 30 சதவிகித நிலத்தையே பயிரிடுகின்றனர். மீதி நிலங்களில் பெரும் பகுதியில்கூட குத்தகைதாரரே பயிரிடுகின்றனர்பணக்கார விவசாயிகள் தான் உரக்கடனையும் அரசாங்கம் அளிக்கும் மற்ற உதவிகளையும் பயன்படுத்திக்கொண்டனர். ஏழை நடுத்தர விவசாயிகள், குத்தகைதாரரின் கடன் கடந்த பத்தாண்டுகளில் வளர்ந்துள்ளது. இது 903 கோடியிலிருந்து ரூ 8489.10 கோடியாகப் பெருகியுள்ளது. இதற்குப்பின் விவரம் தரப்படவில்லை. ஏனெனினில் கிராமப்புற வாழ்க்கையைப் பற்றிய அருவருப்பான உண்மைகளை வெளிப்படுத்த அரசு விரும்பவில்லை என்பதுதெளிவு. கடைசியாக வெளிவந்த ரிசர்வ் பாங்கு அறிக்கையில் கூட்டுறவுக்கடன் 1951-52-ல் 246 கோடியிலிருந்து 1967—68-ல் 405 கோடியாக உயர்ந்திருப்பதைக் காட்டுகிறது. என்றலும் இது பெரு நிலப்பிரபுக்களையும் பணக்கார விவசாயிகளையும் கொழுக்க வைக்கவே பிரதானமாகப் போயிருப்பதையும் மிகப் பெரும்பகுதி விவசாயிகள் புறக்கணிக்கப்பட்டிருப்பதையும் கீழ்வருமாறு குறிப்பிடுகிறது :—

"கிராமப்புற மக்கள் புறக்கணிக்கப்படுவதுவிவசாய உற்பத்தியைப் பாதிப்பது மட்டுமின்றி பெரும் சமூக—பொருளாதார விளைவுகளையும் ஏற்படுத்தும் என்பதை உணர்ந்து இந்தப் பிரச்னையைத் தீர்க்க யாதார்த்த ரீதியிலான ஆனல் பெருமளவிலான நடவடிக்கை எடுக்க வேண்டும்."

இதற்கு முன்பும் இவ்விதமான பிரகடனங்கள் விடுக்கப்பட்டுள்ளன. ஆனல் அவையெல்லாம் ஏட்டளவிலேயே நின்றுவிட்டன. இதன் விளைவாக முதலீட்டுக்கும் பணம்கிடைக்கவில்லை. பெரும் பகுதி விவசாயிகளின் கஷ்ட நிலைமையே நீடிக்கிறது.

விவசாயத்தை நவீனப் படுத்துவதின் பெயரில் டிராக்டர்கள் உதவியுடன் பெரிய நிலப்பிரபுக்கள் விரிந்த பண்ணைகள் அமைப்பதற்கு உதவும் முறையில் அரசாங்கம் கோடிக்கணக்கில் செலவிடுகிறது.

இந்த நிலப்பிரபுத்துவச் சுரண்டல்மீது முதலாளித்துவச் சந்தையின் பிடிப்பும் விவசாயப் பெருங்குடி மக்களை அழுத்துகிறது சமத்துமற்ற வியாபார முறை மூலம் விவசாயிகளின்உற்பத்திப்பொருள்களுக்குக் குறைந்த விலை கொடுத்தும் தொழிற்சாலை உற்பத்திப் பொருள்களுக்கு அதிக விலை விதித்தும விவசாயிகள் வறுமைபபடுகுழியில் தள்ளப்படுகின்றனர். தற்போதுபொதுப் பொருளாதார நெருககடி முற்றிவரும் நிலையில் விவசாய மக்களை மேலும் தாக்குவதற்கும், அவர்களுடைய தோள்களில் நெருக்கடியின் சுமையைச் சுமத்துவதற்கும் இந்தப் பிடிப்பையே பயன்படுத்துகின்றனர். இது சமீபகாலத்தில் வர்த்தகப்பயிர்களுக்கு துரிதமாக விலை வீழ்ச்சியடைந்து வருவதில் காண முடியும்.

## விவசாயிகள் உறிஞ்சப்படுகின்றனர்

கச்சா சணலின் விலை 1968-69-ல் பணங்குக்கு ரூ.65 லிருந்து 1969-70-ல் ரூ. 40 ஆகக் குறைந்துள்ளது.பீகாரில் விவசாயிகளுக்கு இந்த விலை கூடக்கிடைக்கவில்லை. குறைந்த பட்சப் பாதகாப்பு விலையான மணங்குக்கு ரூ. 40 உற்பத்தி செலவுக்கும் குறைவானதாகும்.இதை ரூ. 45ஆக உயர்த்துமாறு மத்திய அரசை மேற்கு வங்க அரசு வற்புறுத்தியுள்ளது.

கருப்பு விலை 1967-68-ல் குவிண்டாலுக்கு ரூ 15 ஆக இருந்தது 1968-69-ல் ரூ. 10 ஆகக் குறைந்துள்ளது. கரும்பு ஆலை உரிமையாளர்கள் இந்த ஆண்டில் குவிண்டாலுக்கு ரூ 7.37 க்கு மேல் கொடுக்காதிருக்க உறுதி பூண்டுள்ளார்கள். பருத்தி விலை சமீபமாதங்களில் கண்டிக்கு ரூ 100 லிருந்து 125 வரை குறைந்துள்ளது. ஆந்திரத்தில் ரூ. 3 கோடி மதிப்புள்ள 20 லடசம் கிலோ கிராம் புகையிலை தேங்கிக் கிடக்கிறது. ஆந்திர அரசாங்கம் இதற்குப பாதுகாப்பு விலை அளிக்க வேண்டியுள்ளது. இதற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல் உணவு தானிய விலைக்கமிஷன் கோதுமை, அரிசி கொள்முதல் விலையை குவண்டாலுக்கு ரூ 10 வீதம் குறைக்க உத்தேசித்துள்ளது.

இதற்கு மாறுக எல்லா உபயோகப் பொருள்களின் விலையும் தொடர்ந்து அதிகரித்துக் கொண்டே வருகிறது. மேலும் அரசாங்கம் உரததுக்கு வரி விதித்து விலையை 10 சதவிகிதம் கூட்டியுள்ளது.

மேலும் அன்றாட உபயோகிப்போர் மார்க்கெட்டைச் சுருக்கி அதிக மூலதனச் சேர்க்கையைப் பெறுவதற்காக, பற்றுகுறை பட்ஜெட் போட்டும் அன்றாட உபயோகப் பொருள்கள் மீது எக்சைஸ் வரி விதித்தும் விவசாயிகள் உறிஞ்சப்படுகின்றனர்.

கடந்த 22 வருடகால பூர்ஷுவா-நிலப்பிரபுத்துவ ஆட்சியில் விவசாயிவர்ககததின் மீது இத்தகைய பெருங்கொள்ளை தடையற்ற முறையில் நடந்து வரும் நிலையில் விவசாயிவர்க்

(10-ஆம் பக்கம் பார்க்க)

# வரலாற்றை உருவாக்குபவர்கள் மக்களே!

[ 1–ஆம் பக்கத் தொடர்ச்சி ]

களைக்கை விட நேர்ந்தது. பி. சி. கோஷின் மைனாரிட்டி அரசாங்கத்தின் மூலம் ஆட்சி செய்வதைக் கைவிட்டு ஜனாதிபதி ஆட்சியைப் புகுத்தி இடைத்தேர்தலுக்கான ஏற்பாடுகளைச் செய்ய நேர்ந்தது.

இடைத்தேர்தல் முடிவுகள் காட்டியதென்ன? காங்கிரஸ் கட்சியின் செல்வாக்கு மேலும் குறைவதையே அது காட்டிற்று. இது ஆளும் வர்க்கத்துக்கு நடுக்கத்தைத் தந்தது. இந்த நிலைமை நீடித்துக்கொண்டுவந்தால் 1972-ல நாடு முழுவதிலும் முற்போக்குச் சக்திகள் மேலும் முன்னேற்றம் அடையும் என்று அவர்கள் உணர்ந்தார்கள். அதன் காரணமாகக் கூட்டுச் சேரும் பிரச்னை முன்னிலைக்கு வந்தது.

எஸ். கே. பாட்டில் -நிஜலிங்கப்பா கம்பெனியின் தலைமையிலமைந்த காங்கிரஸ் கட்சியின் ஒரு பிரிவு ஜனசங்கத்துடனும், சுதந்திரா கட்சியுடனும் கூட்டுச் சேருவதைப் பகிரங்கமாக வலியுறுத்தியது. திருமதி இந்திரா காந்தியின் தலைமையிலமைந்த இன்னொரு பிரிவு இந்தக்கூட்டை விரும்பவில்லை. இதனால் முஸ்லீம்களும், அரிஜனங்களும் காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகுவார்கள் என்று இந்திரா கோஷ்டி கருதுகிறது. மேலும் கேரளத்திலும் மேற்கு வங்கத்திலும் அமைந்த இரு ஐ. மு. அரசுகளும் இயங்கிய விதமும், அவற்றின் கொள்கைகளும் நாடு முழுவதிலுமுள்ள ஜனநாயக இயக்கத்தின் கவனத்தை ஈர்த்தன.

## ஏகபோக வாதிகளின் நலன்கள்

சுதந்திரா கட்சியையும் ஜனசங்கத்தையும் ஏகபோக வாதிகளின் நலன்களுக்காக நிற்கும் கட்சிகள் என்று மக்கள் அடையாளம் கண்டுகொண்டிருந்தனர். இந்தக் கட்சிகளுடன் கூட்டுச் சேருவது காங்கிரசின் பெயரை மேலும் கெடுத்துவிடும் என்று இந்திரா காந்தியின் தலைமையிலமைந்த கோஷ்டி கருதியது.

இதற்கிடையே உட்கட்சிப் போராட்டமும் தீவிரமடைந்தது. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் பெங்களூர் கூட்டத்துக்கு திருமதி காந்தி அனுப்பிய 10 அம்சத் திட்டத்தை இந்தப் பின்னணியில் தான் பார்க்கவேண்டும். தீவிரமான திட்டத்துக்குப் போராடுவதாகக் காட்டிக் கொள்ளுவதின் மூலமே காங்கிரஸ் கட்சித் தலைமையின் சிண்டிகேட் பிரிவு என்று அழைக்கப்படும் கோஷ்டிக்கு எதிராகத் தன்னைப் பலப்படுத்திக்கொள்ள முடியும் என்று திருமதி காந்தி கருதக்கூடிய சூழ்நிலை நாட்டில் உருவாயிற்று.

இந்தத் திட்டத்தை முன்வைத்த போது சிண்டிகேட் கோஷ்டியினரும் இதைவெளிப்படையாக எதிர்க்கத் துணியவில்லை என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும். இதற்கு மாறாக, சிண்டிகேட் கோஷ்டியைச் சேர்ந்த ஒருவரே அ. இ. கா. க. கூட்டத்தில் இந்தத் திட்டத்தைப் பிரேரேபிக்க முன் வந்தார். நாட்டில் உருவாயிருந்த மக்களது மனோநிலையை காட்டும் அளவுகோல் இது.

இன்று ஏற்பட்டுள்ள இந்தப் பிளவு முதலாளி வர்க்க அணிகளில் ஏற்பட்டுள்ள பிளவாக இருக்குமா என்ற கேள்வி எழுவது இயல்பே. இந்திய முதலாளிவர்க்கம் ஏகபோக முதலாளி வர்க்கப் பிரிவாகவும் ஏகபோகமற்ற முதலாளித்துவப் பிரிவாகவும் பிளவுபட்டுள்ளதை இது குறிக்குமா? இந்திரா காந்தி கோஷ்டி ஏகபோக வாதிகளை எதிர்த்துப் போராடக் கிளம்பியுள்ள ஏகபோக மற்ற முதலாளித்துவக் கோஷ்டியைப் பிரதிநிதித்துவப் படுத்துவதை இது குறிக்குமா? இவ்வினாக்களுக்கு விடை காணுவது அவசியம்.

## தவறான கணிப்புகள்

இன்றைய நிலையில் இந்திய முதலாளி வர்க்கம் பிளவுபட்டுவிட்டது என்ற முடிவுக்கு வருவது தவறான கணிப்பாகும். இந்தக் கணிப்பின் அடிப்படையில் தங்களுடைய கொள்கைகளை வகுத்துக் கொள்ளுவோர் திண்டாட்டத்தில்தான் சிக்குவார்கள். முதலாளி வர்க்கம் ஒருமைப்பாடுள்ள ஒரு வர்க்கமல்ல என்பது உண்மையே. ஏகபோக வாதிகளும் மற்றவர்களும் இருக்கிறார்கள். ஏகபோக வாதிகள் குறிப்பாக நெருக்கடி காலகட்டத்தில் தங்களுடைய பலவீனமான வர்க்க சகோதரனை உறிஞ்சப்பார்ப்பதும் உண்மையே. எனவே அவர்களுக்கிடையே மோதுதல்கள் ஏற்படுவது இயல்பு. முதலாளி வர்க்கத்தின் தன்மையே அது தான்.

ஆனால் ஒன்றையொன்று எதிர்க்கக் கூடிய முறையில் இருபிரிவுகளாக இந்த வர்க்கம் பிளவு படுவதற்கு இது மட்டும் போதாது. இம்மாதிரி நிலைமை ஏற்படுவதற்கு மற்றொரு முக்கிய அம்சமும் இருக்க வேண்டும். தொழிலாளி வர்க்கத்தின் தலைமையிலமைந்த ஜனநாயக இயக்கம் போதிய அளவு பலமுள்ளதாகவும் நாடு முழுவதிலும் பரவியுள்ளதாகவும் இருக்கவேண்டும். இது மட்டுமே முதலாளி வர்க்கத்தின் ஏகபோக மற்ற பிரிவினருக்கு நம்பிக்கையளிக்கும். ஏகபோக வாதிகளை எதிர்த்துப் போராடக் கூடிய வலுவுள்ள சக்தி இருக்கிறது என்ற நம்பிக்கையை அளிக்கும்.

நாட்டின் இன்றையநிலைமை அதுவல்ல. நாடுமுழுவதிலும் ஜனநாயக இயக்கத்தை வளர்ப்பதற்கான வாய்ப்புகள் நாள்தோறும் பெருகி வரும்போது அது ஏற்கனவே முதலாளிவர்க்கத்தைப் பிளவுபடுத்தக்கூடிய முறையில வலுவடைந்துவிட்டதென்றும் நாடுமுழுதும் பரவிய இயக்கமாக வளர்ந்துவிட்டதென்றும் கருதுவது பகற் கனவாகும்.

இன்று ஏற்பட்டுள்ள மோதுதலை தற்போதைய நிலைமையைச் சமாளிப்பதற்குகந்த கொள்கைகள், நடைமுறை தந்திரங்கள்மீதமைந்த முதலாளி வர்க்க மோதுதலாகவே பார்க்க வேண்டும்.

நெருக்கடி முற்றி வரும் நிலையில் முதலாளி வர்க்கத்தின் சிந்தனையும் நெருக்கடிக்குள்ளாகிறது. அது மட்டுமல்ல. ஜனநாயக விரோத நடவடிக்கைகளில் இறங்குவதின் மூலமும் கம்யூனிஸ்ட் கட்சியையும் தொழிலாளி வர்க்க, விவசாயிகள் வர்க்க எழுச்சிகளையும் மேலும் தீவிரமாகவும் கண்மூடித்தனமாகவும் ஒடுக்குவதின் மூலமும் நிலைமையைச் சமாளித்து விடலாம் என்று முதலாளி வர்க்கத்தின் ஒரு பிரிவு கருதுகிறது.

இன்னொரு பிரிவுஇம்மாதிரி செய்வது மக்களிடம் தன்னுடைய நிலையை மேலும் பலவீனப்படுத்தும் என்று கருதுகிறது. எனவேதான் பெரு முதலாளி வர்க்கத்தின் ஒரு பிரிவு ஏகபோகமில்லாத முதலாளிவர்க்கப் பிரிவினருக்கும், கிராமப்புற பணக்கார விவசாயிகளுக்கும் கடன் வசதி போன்ற சில சலுகைகளை வழங்குவதின் மூலம் இந்த நெருக்கடியைச் சமாளித்து விடலாம் என்று கருதுகிறது.

இந்த நோக்கத்தைஈடேற்றுவதற்கே 14 பாங்குகள் தேசியவுடைமையாக்கப்பட்டன. அதே சமயத்தில் இந்த நடவடிக்கையை மகத்தானசோஷலிச நடவடிக்கை என்றுகாட்டி மக்களின் ஆதரவைத் திரட்டிக் கொள்ள முடியும் என்றும் நம்பப்படுகிறது.

## முதலாளிக்கு வாக்குறுதி

பாங்குகள் தேசியவுடைமையாக்கப்பட்டு மூன்று மாதங்கள் ஓடிவிட்டன. பிரதமமந்திரியின் அறிவிப்புகள் கடந்த 22 ஆண்டுகளாகப் பின்பற்றி வந்த கொள்கைகளில் எந்த அடிப்படை மாற்றத்தையும் செய்ய உத்தேசிக்கப்படவில்லை என்பதைத் தெளிவாகத் காட்டுகின்றன.' பெரு முதலாளிகளின் நியாயமான கடன் தேவைகள் பூர்த்தி செய்யப்படும் என்று அவர் அடிக்கடி வாக்குறுதியளித்துள்ளார். பிரதம மந்திரியின் கொள்கையை நாவல் டாட்டா (பெரு முதலாளி) புகழ்ந்து பாராட்டியிருப்பதிலும் முக்கியத்துவமில்லாமல் இல்லை.

நம் நாடு அந்நியஉதவியைச் சார்ந்து நிற்பதிலிருந்து மாற்றம் எதுவுமில்லை. இதற்கு மாறாக, நாட்டில்இரு அமோக விளைச்சல் ஏற்பட்டிருப்பதாக விளம்பரப் படுத்திய பின்னரும் அரசாங்கம் 30 லட்சம் டன் கோதுமையையும் ஒரு லட்சம் பேல் பருத்தியையும் 90 ஆயிரம் டன் தாவர எண்ணையையும் இறக்குமதி செய்வதற்காக அமெரிக்காவுடன் பி. எல். 480-ன் கீழ் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளது.

முன்பு விலையில் ஐந்தில் இரண்டு பங்கையே டாலராகத்தரவேண்டும் என்றுஇருந்ததிற்கு மாறாக ஐந்தில் மூன்று பங்கை டாலராகத்தர வேண்டும் என்று அமெரிக்கர்கள் நிர்ப்பந்தித்துங்கூட அது இந்த ஒப்பந்தத்தைச் செய்வதிலிருந்து அரசாங்கத்தைத்தடுக்கவில்லை. இது இந்திய அரசு அமெரிக்காவைச் சார்ந்து நிற்கும்நிலையையே கோடிட்டுக் காட்டுகிறது. பழைய கொள்கையை மாற்ற மறுக்கும் போக்கே இது.

உடைமை வர்க்கங்களில் மேலும் சில பிரிவுகளுக்கு கடன் வசதி விஸ்தரிக்கப்பட்டிருப்பதைக் கொண்டு பாங்குகள் தேசியவுடைமைத் திட்டத்தின் வெற்றியைப் பார்க்க முடியாது. நாட்டின் பொருளாதார அரசியல் வாழ்வில் ஏகபோக வாதிகளின் நிலைகளைத் தகர்ப்பதற்கு அரசாங்கத்தின் கையில் கிடைத்துள்ள நிதி வசதிகள் இப்போது பயன்படுத்தப்படுகிறதா என்பதைக் கொண்டே இந்தத் திட்டத்தின் வெற்றியைத் தீர்மானிக்க முடியும்.

ஆயுள் காப்பீட்டுக்கழகம், தொழில் நிதி கார்ப்பரேஷன் போன்ற அரசாங்க நிதி அமைப்புகளும், இந்திய அரசின் கட்டுப்பாட்டின் கீழுள்ள முன்னாள் ஷெட்யூல் பாங்குகளும் அளித்த நிதிவசதிக் கடன்களை உபயோகித்துக் கொண்டே கடந்த காலத்தில் ஏகபோகவாதிகள் வளர்ந்தார்கள் என்பது அனைவரும் அறிந்துள்ள உண்மையாகும்.

ஆயுள் காப்பீட்டுக்கழகமும், மற்ற அரசாங்க அமைப்புகளும் ஏற்கனவே ஏகபோக வாதிகளின் கம்பெனிகளில் 27 சதவிகிதப் பங்குகளை எடுத்துள்ளன. தேசியவுடைமையாக்கப்பட்டிருக்கும் 14 பாங்குகளும் இந்தக் கம்பெனிகளில் 16 சதவிகித மூலதனம் போட்டுள்ளன. எனவே இன்றைய ஏகபோக முதலாளிகளின் கம்பெனிகளிலுள்ள 43 சதவிகித மூலதனம் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் இருக்கிறது.

இவ்வளவு பெரும் அளவில் பங்குகளை வைத்துக்கொண்டிருப்பது இந்திய அரசாங்கத்தை இவற்றின் மீது ஆதிக்கம் செலுத்தும் நிலையில் வைத்துள்ளது. இந்திய அரசாங்கம் விரும்பினால் புதிய சட்டம் இயற்றாமலேயே தற்போதைய கம்பெனிச் சட்டத்தின் பிரிவுகளின் கீழ் இந்தக் கம்பெனிகளின் நிர்வாகத்தை எடுத்துக்கொள்ளமுடியும். திருமதி இந்திரா காந்தி இதைச் செய்வாரா?

நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எந்த அடிப்படை மாற்றமும் சாத்தியமல்ல என்றும், மாற்றங்கள் தேவைப்பட்டால் மேலெழுந்தவாரியான சிறு மாற்றங்கள் தான் செய்யப்படும் என்றும் சமீபத்தில் அவர் பேசியிருப்பது எந்த அடிப்படைக் கொள்கை மாறுதலையும் செய்ய உத்தேசிக்கப்படவில்லை என்பதையே காட்டுகிறது.

தற்போதைய அடிப்படைக் கொள்கைகளுக்குள்ளேயே நெருக்கடியைத் தீர்க்க முயலும் எந்த முயற்சியும் வெற்றியடையாது. சிண்டிகேட்டுடன் தனது போராட்டத்தில் அவர் வெற்றியடையலாம். காங்கிரஸ் ஸ்தாபனத்தைத் தன் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வருவதிலும் அவர் வெற்றி பெறலாம். ஆனால் இந்த அடிப்படைக் கொள்கைகளை அப்படியே பின்பற்றிக் கொண்டிருக்கும் வரை பொருளாதார நெருக்கடி மேலும் தீவிரமாவதைத் தடுக்க முடியாது. மக்களிடம் வெறுப்பு வளர்ந்து சமூக மோதல்களும் நெருக்கடியும் அதிகரிக்கவே செய்யும்.

என்றாலும் ஆளும் கட்சிக்குள் ஏற்பட்டுள்ள தற்போதைய மோதுதலைப் பார்க்காமல் ஜனநாயக இயக்கம் கண்ணை மூடிக்கொண்டிருக்க முடியாது. இரு கோஷ்டிகளுமே மோசமானவை என்று கூறிக்கொண்டு நாம் சும்மாயிருக்க முடியாது. சிண்டிகேட்டை முறியடிப்பதில் ஜனநாயக இயக்கம் மிகவும் அக்கறை கொண்டுள்ளது. சிண்டிகேட்டின் வெற்றி என்பது ஜனநாயக இயக்கத்தின் மீது வன்முறைத் தாக்குதல் அதிகரிக்கும் என்பதையே ஊர்ஜிதம் செய்யும்.

இரண்டாவதாக ஆளும் வர்க்கத்தின் தலைவர்கள் எழுப்

( 9-ஆம் பக்கம் பார்க்க )

# எங்கே மகிழ்ச்சி?

"தமிழகத்தில் மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்கிறார்கள்"

—கலைஞர் முதல்வர் கருணாநிதி
முரசொலி 20–11–69

படியரிசி விலை ரூபாய் மூன்றேகால்!

—மதுரைச் செய்தி

"மேற்குவங்க நிலைமை கேள்விக் குறியாக இருக்கிறது"

—கலைஞர் முதல்வர் கருணாநிதி

பத்து லட்சம் தொழிலாளர்கள் ரூ 15லிருந்து ரூ 35 வரை சம்பள உயர்வு பெற்றனர். 5 லட்சம் ஏக்கர் நிலம், நிலமில்லாத விவசாயிகளுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டது.

—மேற்குவங்கச் செய்தி

# நிலச் சீர்திருத்தமின்றி விவசாய நெருக்கடி தீராது

## அ. இ. விவசாய மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம்

விவசாய நெருக்கடி மேலும் மேலும் ஆழமாகிக்கொண்டு வருவதை அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் 20-வது மாநாடு கவலையுடன் பார்க்கிறது. இதனால் விவசாயப் பெருங்குடி மக்கள் மீது தாங்கவொண்ணாத சுமை ஏறிக்கொண்டே வருகிறது. விவசாய உற்பத்தி தேக்க நிலையிலேயே இருந்து கொண்டிருக்கிறது. இதனால் இந்தியப் பொருளாதாரம் முழுதுமே பெரும் நெருக்கடியில் சிக்கியுள்ளது.

விவசாயிகளுக்கு நன்மையளிக்கும் விதத்தில் உண்மையான நிலச் சீர்திருத்தம் கொண்டுவர ஆளும்வர்க்கங்கள் பிடிவாதமாக மறுத்து வந்ததின் விளைவே இது. இதைப் பற்றி விவசாயிகள் சங்கம் மீண்டும் மீண்டும் எச்சரித்து வந்திருக்கிறது.

நிலச் சீர்திருத்தம் என்பது இடைத்தரகர்களை ஒழிப்பது மட்டுமல்ல. நிலச் சீர்திருத்தம் என்பது நிலப்பிரபுத்துவச் சுரண்டலையே அடியோடி ஒழித்து, நிலப் பிரபுக்களின் நிலத்தை நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களுக்கும் ஏழை விவசாயிகளுக்கும் இலவசமாக விநியோகிப்பதாகும் கொள்ளை லாபம் அடிப்பவர்களின் சுரண்டலிலிருந்தும் கள்ளமார்க்கெட் தந்திரோபாயங்களிலிருந்தும் விவசாயிகளை விடுவிப்பதாகும் அது இம் மாதிரியான நிலச் சீர்திருத்தங்களே விவசாயிகளின் ஆக்க சக்தியைப் பெருக்கெடுத்தோடச் செய்யும். அவர்களுடைய நிலைமையை உயர்த்தும். விவசாய உற்பத்தியில் அவர்களை முதலீடு செய்யச் செய்யும். இவ்விதமாக தங்குதடையற்ற உற்பத்தியை உறுதிப்படுத்தும். தொழிற்சாலைப் பொருட்களுக்கான உள்நாட்டு மார்க்கெட்டையும் விஸ்தரிக்கும். இந்தியாவில் நிலவும் திட்டவட்டமான நிலைமைகளில்—கிடைக்கக் கூடிய நிலத்துக்கு நிலமற்ற விவசாயத்தொழிலாளர் எண்ணிக்கையும் ஏழை விவசாயிகள் எண்ணிக்கையும் மிக அதிகமாகவுள்ள நிலைமையில்—நிலப்பிரபுக்களின் எல்லா நிலங்களையும் விவசாயிகளுக்கு விநியோகிப்பதே சிறந்தபரிகாரமாகும் இத்துறையில் அனைவருடைய கவனத்தையும் விவசாயிகள் சங்கம் ஈர்க்கிறது.

### சட்டத்தில் ஓட்டைகள்

ஒரு சிலருடைய கைகளிலேயே தேங்கியுள்ள நிலக்குவியலைத் தகர்ப்பது, அதிகப்பட்சம் கிடைக்கும் உபரி நிலத்தையும் அரசாங்கத்தரிசு நிலத்தையும் எவ்வளவு அதிகக்குடும்பங்களுக்கு விநியோகிக்க முடியுமோ அவ்வளவு குடும்பங்களுக்கு விநியோகிப்பது, குத்தகைதாரருக்கு உண்மையான பாதுகாப்பு அளிப்பது ஆகியவை முற்றும் அத்தியாவசியமான நடவடிக்கைகளாகும். ஒருசிலர் கைகளிலேயே நிலக்குவியல் இருப்பது ஓட்டாண்டியாக்கப்பட்ட விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் நீடித்திருப்பதாகும். இது விவசாயிகளை நிலப்பிரபுக்கள் மிருகத்தனமாகச் சுரண்டியும்உபரி தானியத்தைப் பதுக்கிவைத்தும் எளிதாகக் கொள்ளை லாபம் அடிப்பதற்கு நிறைய வாய்ப்பளிக்கிறது இந்தநிலையில் நிலக்குவியலைத் தகர்ப்பதுநிலச்சீர்திருத்தத்துக்கான வழியாகும். என்றாலும் இது அறவேநிறைவேறவில்லை.

உச்சவரம்புச் சட்டங்கள் பற்றிஆளும் வர்க்கங்கள் வாய்கிழியப் பேசியபோதிலும் இது நிறைவேறவில்லை. பல சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. பெரிதாகப் பெருமையடித்துக் கொள்ளப்படுகிறது. ஆனால் இந்தச் சட்டங்களின் பின்னால் அமைந்துள்ள கொள்கை, நிலக்குவியலை அகற்றுவதல்ல என்பதும் அனுபவ வாயிலாக நிரூபணமாகியுள்ளது.நிலப்பிரபுககளின் உதவியுடன் உணவு உற்பத்திப்பிரச்னையைத் தீர்க்க ஆளும் வர்க்கங்கள் நம்பின.

எனவே உச்சவரம்பு விதிகளில் பல ஓட்டைகளும் விதிவிலக்குகளும் விடப்பட்டன. இதை அமுலாக்குவது தாமதப்படுத்தப்பட்டது. அமுலாக்கப்பட்ட போதும் பச்சையாக நிலப்பிரபுக்களுக்கு ஆதரவான முறையில்அமுலாக்கப்பட்டது. தவறான நில மாற்றங்களையும் உச்சவரம்புக்கு டிமிக்கி கொடுத்திருப்பதையும் கட்டுப்படுத்தவோ அல்லது ரத்து செய்யவோ எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. சட்டத்தைத் தவறாகப் பயன்படுத்துவதற்கு நிலப்பிரப்புக்கள் தாராளமாக அனுமதிக்கப்பட்டனர். இவ் விஷயத்தில் அரசியல் சட்டம் அவர்களுக்கு அனுசரணையாக இருந்தது. உபரி நிலத்தை விநியோகிப்பதற்கு எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. ஸ்தாபன ரீதியாகத் திரட்டப்பட்ட விவசாயி வர்க்கத்தின் தீவிர ஒத்துழைப்பும், தலையீடுமின்றி எந்த நிலச்சீர்திருத்தமும் சாத்தியமல்ல என்று அனுபவம் நமக்குக் காட்டுகிறது.

ஆனால் கேரள, மேற்கு வங்க ஐ. மு. அமைச்சரவைகளைத் தவிர மற்ற அரசுகள் இதைவரவேற்பதற்குப் பதில் விவசாயிகள் அணி திரண்டு வந்த போதெல்லாம் அவர்களுக்கெதிராக மிருகத்தனமான போலீஸ் அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விட்டுள்ளன. இந்தக் கொள்கை தவிர்க்க முடியாதபடி நம்முடைய விவசாயப் பொருளாதாரத்தை தற்போதைய நெருக்கடியில் ஆழ்த்தியுள்ளது.

### பசுமைப் புரட்சி

இந்த அருவருப்பான உண்மையை ஆளும் வர்க்கங்கள் மறைக்கவிரும்புகின்றன.இதற்காக ரசாயன உரம், வீரிய விதை முதலியவற்றின் உதவியுடன் "பசுமைப் புரட்சி" என்று கூறப்படுவது பற்றிய கோஷத்தை எழுப்புகின்றனர். பெரிய நிலப்பிரபுக்கள், பணக்கார விவசாயிகள் உதவியுடன் இவ்வாறு செய்வது அதிகப் பலன் தரப்போவதில்லை என்றும் விவசாய நெருக்கடியைத் தணிக்க எந்த விதத்திலும் உதவப் போவதில்லை என்றும்விவசாயிகள் சங்கம் உறுதியாக நம்புகிறது. நிலச்சீர்திருத்தத்தை அமுலாக்குவது அத்தியாவசியத் தேவை என்பதை அனுபவம் நன்கு உணர்த்துகிறது.

### ஐ. மு. அமைச்சரவைகளில்

வெவ்வேறு மாநிலங்களில் தங்களுடைய அனுபவத்தின் மூலம் இந்த உண்மையை உழைக்கும் விவசாயி வர்க்கம் உணர்ந்து நிலத்தோடு சம்பந்தப்பட்ட பல்வேறு பிரச்னைகளில் பல உறுதியான போராட்டங்கள் தொடுத்துள்ளதை விவசாயிகள் சங்கம் பார்க்கிறது. நிலச்சீர்திருத்த (திருத்த) மசோதாவை நிறைவேற்றியமைக்காக கேரள ஐ. மு. அமைச்சரவையை விவசாய சங்கம் வாழ்த்துகிறது அதற்கு இந்திய ஜனதிபதி விரைவில் அங்கீகாரம் அளிக்கவும் வற்புறுத்துகிறது. சில அவசர சட்ட நடவடிக்கைகளையும் நிர்வாக நடவடிக்கைகளையும் மட்டுமின்றி நிலப்பிரபுக்களுக்கு எதிராக வலுவான போராட்டத்தை விவசாயிகள் கட்டவிழ்த்து விடவும்உதவியதற்காகமேற்கு வங்க ஐ மு. அமைச்சரவையை விவசாயிகள் சங்கம் குறிப்பாக வாழ்த்துகிறது. விவசாயிகள் போராட்டத்துடன் சேர்ந்த விவசாய நெருக்கடியும்கேரள, மேற்கு வங்க ஐ. மு. அமைச்சரவைகள் எடுத்த நடவடிக்கைகளும் பல பூர்ஷுவா பொருளாதார வாதிகளைக்கூட காங்கிரஸ் அரசின் கொள்கை தோல்வியடைந்ததை ஒப்புக்கொள்ளுமாறு நிர்ப்பந்தித்துள்ளன. நிலச் சீர்திருத்தப் பிரச்னையையும் அது முன்னுக்குக்கொண்டு வந்துள்ளது. பிரதம மந்திரியும் மத்திய உணவு அமைச்சரும்கூட இதை ஒப்புக்கொண்டுள்ளனர். ஆனால் எந்த உருப்படியான நடவடிக்கையுமின்றி அவர்களுடைய அறிக்கைகள் மக்களை ஏமாற்றுவதற்கான மற்றொரு முயற்சியேயாகும்.

### குறைந்தபட்ச நடவடிக்கைகள்

இந்நிலைமையை ஓரளவு அபிவிருத்தி செய்வதற்குக்கூட கீழ்க்கண்ட நடவடிக்கைகள் தேவையானவை என்று அகில இந்திய விவசாயிகள் சங்கம் கருதுகிறது.

(அ) குடும்பத்துக்கு உச்சவரம்பு கட்டியும் பழத்தோட்டங்கள், குளமீன் துறை, திறமையாக நிர்வகிக்கப்படும்பண்ணைகள்,மத ஸ்தாபனங்கள் போன்றவற்றிற்கு விதிவிலக்குகளை அகற்றியும் உச்சவரம்பு விதிகளைத் திருத்த வேண்டும்.

(ஆ) கடந்தகாலத்தில் செய்யப்பட்ட எல்லா நிலமாற்றங்களையும் ஆராய்ந்து பினாமி மாற்றங்களைச் ரத்து செய்ய வேண்டும்.

(இ) ஸ்தாபன ரீதியாகத் திரட்டப்பட்ட விவசாயி இயக்கத்தின் தீவிர ஒத்துழைப்புடன் துரிதமாக நிலச் சீர்திருத்தம்அமுல் படுத்துவதை உறுதி செய்ய வேண்டும்.

(ஈ) ஏழை விவசாயிகளுக்கும் விவசாயத் தொழிலாளர்களுக்கும் எல்லா உபரி, தரிசு நிலங்களையும் உடனே இலவசமாக விநியோகிக்க வேண்டும்.

(உ) நிலச்சீர் திருத்தங்களைக் குலைப்பதற்கு நீதிமன்றங்களை நிலப்பிரபுக்கள் தவறாகப்பயன் படுத்த முடியாத முறையில் அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும்.

(ஊ) சிறியநிலவுடைமையாளர்களின் உண்மையான தேவைகளுக்குப் பாதுகாப்புடன் குத்தகைதாருக்கு முழுப் பாதுகாப்பளிக்க வேண்டும்.

நிலச் சீர்திருத்தத்தில் முன்னேற்றம் காண்பதற்கு இவைகள் அத்தியாவசியமான குறைந்தபட்ச நடவடிக்கைகளாகும். நிலச் சீர்திருத்தம் சம்பந்தமான இந்தப் பிரச்னைகளில் தீவிர இயக்கம் நடத்துமாறு பொதுவாக எல்லா விவசாயிகளையும் குறிப்பாக விவசாய சங்கங்களையும் அகில இந்திய விவசாய சங்கத்தின் 20-வது மாநாடுவேண்டுகிறது.

வெறும் இயக்கங்கள் மட்டும் போதுமானவையல்ல என்று விவசாயிகள் சங்கம் கருதுகிறது. திட்டவட்டமான நிலைமைக் கேற்ப வெவ்வேறு பிரச்னைகளில் தீவிரமான விவசாயிகள் போராட்டங்கள் அவசியமானவையாகும். நிலவெளியேற்றத்துக்கு எதிராகவும், உபரி, தரிசு நிலங்களை விநியோகிக்கக்கோரியும், குத்தகையைக் குறைக்கக் கோரியும், பினாமி நிலங்களை மீட்கக் கோரியும் நிலப்பிரபுக்களின் தாக்குதல்களிலிருந்து நிலங்களையும் பயிர்களையும் காக்கக் கோரியும், போராட்டங்களைத் தீவிரப்படுத்துமாறு சம்பந்தப்பட்ட அனைவரையும் 20-வது மாநாடு அழைக்கிறது. எல்லா சாத்தியமான வழிகளிலும் நிலச்சீர்திருத்த லட்சியத்துக்கு ஆதரவளிக்குமாறு எல்லா ஜனநாயக உள்ளம் படைத்த மக்களையும், ஸ்தாபனங்களையும் விவசாயிகள் சங்கம் கேட்டுக் கொள்கிறது.

## கேரளத்தில் வாலிபர்கள் அணி திரளுகிறது

### இளைஞர் மாநாட்டில் 3 லட்சம் பேர் அணிவகுத்தனர்

கேரள சோஷலிஸ்ட் இளைஞர் கழகத்தின் 2-வது மாநில மாநாடு இம்மாதம் 8, 9 தேதிகளில் திருச்சூரில் நடைபெற்றது. மாநாட்டின் ஊர்வலத்தில் கேரளமெங்கிலுமிருந்துவந்த 3 லட்சம் வாலிபர்கள் கலந்து கொண்டார்கள்.

பிறகு நடைபெற்ற ஜன சமுத்திரப் பொதுக் கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட் பீரோ உறுப்பினர்களான தோழர்கள் பி. டி. ரணதிவே, ஏ. கே. கோபாலன் ஆகியோர் இன்றைய அரசியல் நிலைமை பற்றியும் இளைஞர்கள் ஆற்ற வேண்டிய கடமைகள் பற்றியும் பேசினார்கள்.

# முரசொலி கூறும் அவதூறு

## மார்க்சிஸ்ட் எதிர்ப்பு பலன் தராது!

**இம்மாதம் 17-ஆம் நாளைய 'முரசொலி' ஏட்டின் தலையங்கம் மேற்குவங்கத்தில் அஜாய் முகர்ஜியும் அவரது கட்சியும் மேற்கொண்டு வரும் ஐ.மு.எதிர்ப்பு நடவடிக்கைக்கு மறைமுக ஆதரவு தெரிவித்தும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிதான் மேற்கு வங்கத்தில் ஏற்பட்டு வரும் நிலைமைக்குக் காரணமென்றும் எழுதி "எனவே அஜாய் முகர்ஜியின் நோக்கத்தைச் சந்தேகிக்காமல் கேரளத்தைப் போன்ற நிலை அங்கு ஏற்படாதிருக்க வழி காண்பதில் இடது கம்யூனிஸ்டுகளுக்கு உள்ளபங்கு குறைவானதல்ல" என்று நமக்கு உபதேசம் செய்ய முன்வந்துள்ளது.**

முரசொலி இந்த உபதேசத்துடன் நிற்கவில்லை. "கொலை செய்யப்பட்டிருக்கிறவர்கள் அனைவர்களும் வேறுகட்சியைச் சேர்ந்தவர்களாகவும் கொலைக்கே காரணமானவர்கள், அல்லது கொலையைச் செய்பவர்களைப் பாதுகாப்பவர்களாகவும் இடதுகம்யூனிஸ்டுகள் இருந்து வருகிறார்கள்" என எழுதி மார்க்சிஸ்டுக் கட்சி மீது அவதூறு பொழிந்து உள்ளது.

விவரங்களை வைத்துக் கொண்டு தி.மு.க ஏடு ஒரு முடிவுக்கு வருவதைவிட, சுதந்திராவும் ஜனசங்கமும், சிண்டிகேட் காங்கிரஸ்காரர்களும், மார்க்சிஸ்டுகளை ஒழித்துக் கட்டுவதே தங்களுடைய பிறவிப் பணியாகக் கொண்டுள்ள வலது கம்யூனிஸ்டுகளும் செய்துவரும் அவதூறுகளை முரசொலி திருப்பிக் கூறி திருப்தியடைகிறது.

கொலை செய்யப்பட்டவர்கள் மார்க்சிஸ்ட் அல்லாத கட்சிகளைச் சேர்ந்தவர்கள் என்ற செய்தி எங்கிருந்து முரசொலிக்கு கிடைத்தது என்று வினவுகிறோம்.

மே. வங்கத்தில் போலீஸ் இலாகா மார்க்சிஸ்ட் அமைச்சர் கையிலிருந்தபோதிலும். அங்கு நிலச்சுவான்தார்கள், காங்கிரஸ் ஏஜெண்டுகளால் கொலை செய்யப்பட்ட மார்க்சிஸ்டுகள், மார்க்சிஸ்டுகள் ஆதரவாளர்கள் எத்தனைபேர் தெரியுமா?

### கொலை செய்யப்பட்டவர்கள்

சில தினங்களுக்கு முன்பு வரை 35 பேர்! மார்க்சிஸ்ட் ஊர்வலங்களை தாக்கியவர்கள், விவசாயிகள்-தொழிலாளர்களின் ஆர்ப்பாட்டங்களைத்தாக்கியவர்கள் போலீசைத் தூண்டி விட்டு சட்டசபைக்குள்ளேயே அனுப்பிக் கலகம் செய்து மார்க்சிஸ்ட் தலைமையிலுள்ள அமைச்சரவையைக் கவிழ்க்க சதி புரிந்த அந்தச் சமயத்தில் எல்லாம் வாய்மூடி மவுனியாக இருந்து வந்த முரசொலி இன்று 'கொலை செய்யப்பட்டவர்கள் எல்லாம் மார்க்சிஸ்டுகள் அல்லாதவர்" என்று பிரலாபிக்கிறது!

கோசிப்பூர் பாக்டரியில் இராணுவத்தை கொண்டே மத்திய அரசு, 4 தொழிலாளர்களை சுட்டுக் கொன்றது முரசொலிக்கு ஞாபகமிருக்கிறதா?

துர்க்காப்பூர் தொழிற்சாலையில் அமைதியை நிலைநாட்டச்சென்ற போலீஸ் காங்கிரசின் தூண்டுதலின்பேரில் ஒரு கலாசாலைக்குள் புகுந்து மாணவர்களைத் தாக்கி பலரை முடமாக்கிய நிகழ்ச்சி பத்திரிகைகளிலெல்லாம் வந்ததே! நினைவிருக்கிறதா?

ஐ.மு. அமைச்சர்களே நேரில் சென்று இவைகளை விசாரித்து காங்கிரசின் தூண்டுதலின் பேரிலேயே இத்தகைய செயல்கள் நடைபெறுகின்றன என்று அறிவித்து கட்டுக்கடங்காத போலீசின் மீது நடவடிக்கை எடுத்து எதிரிகளின் சதிகளை முறியடிக்க வேண்டுமென்று கூறினர்.

"கொலை செய்யப்பட்டவர்கள் எல்லாம் மார்க்சிஸ்டல்லாதார்" என்று முரசொலி கூறுவது, சிண்டிகேட், ஜனசங்கம், சுதந்திரா கட்சியினரது பிரச்சாரமாகும்.

### தி.மு.க. சாதிக்க முடியாத சாதனை!

தி. மு. க. தமிழகத்தில் சாதிக்க முடியாததை மே. வங்கத்தில் மார்க்சிஸ்ட் தலைமையில் உள்ள ஐ.மு. அரசு சாதித்துள்ளது!

முன்பு இருந்த காங்கிரசாட்சியில் நபருக்கு 25 ஏக்கர் நில உச்சவரம்பு என்று ஒருசட்டம் இயற்றியிருந்தார்கள். சட்டம் இயற்றினார்களேயொழிய, 25 ஏக்கருக்கு மேற்பட்ட நிலமுள்ளவர்களிடமிருந்து நிலத்தை எடுத்து விவசாயிகளுக்குப் பகிர்ந்தளிக்கவில்லை.

நிலச்சுவான்தார்களே, '25 ஏக்கருக்கு மேலுள்ள நிலத்தை அரசாங்கத்திடம் ஒப்படைத்துவிட்டோம்' என்று பொய்யான கணக்கை வருவாய்த்துறை இலாகாவில் எழுத வைத்து அந்த நிலங்களைத் தாங்களே தொடர்ந்து அனுபவித்து வந்தனர்.

சிண்டிகேட் தலைவர் திருவாளர் அதுல்யாகோஷ் இன்று கட்டியிருக்கிற ஒரு வீடே அரசாங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டதாக ரிக்கார்டில் எழுதப் பெற்றுள்ள நிலத்தில் கட்டப்பட்டுள்ளது. இத்தகைய விபரங்களை எல்லாம் அண்மையில் கண்டுபிடித்தார் மார்க்சிஸ்ட் வருவாய்த்துறை அமைச்சர் தோழர் அரிகிருஷ்ணகோனார். இவ்வாறு 5 லட்சம் ஏக்கர் நிலம் மே. வங்கத்தில் அரசாங்கத்திடம் ஒப்படைக்கப்பட்ட நிலம்என்று அறிவிக்கப்பட்டது

**கே. முத்தையா**

ஆனால் உண்மையில் நிலப்பிரபுக்கள் கையிலேயே இருந்தது. அவர்களே தொடர்ந்து உபயோகித்து வந்தனர்.

ஐ. மு. அமைச்சரவை அமைந்தபின்பு இந்த5 லட்சம் ஏக்கர் நிலத்தைப்பற்றிய கணக்குகளை எடுத்தது, அவைகளைப்பற்றிப் பகிரங்க "நோட்டீசு"கள் அச்சடித்து எல்லாக் கிராமங்களுக்கும் விநியோகித்தது. இந்த நிலங்களை எல்லாம் விவசாயிகள் எடுத்துக் கொள்ளலாம் என்றும் மே. வங்க மார்க்சிஸ்ட் அமைச்சர் அறிவித்தார். தி மு க. ஆட்சியில் இத்தகைய துணிச்சலான செயல் எதையும் நாம் காணமுடியாது.

விவசாயிகள் சங்கம் ஊர் ஊராகக்கூடி, இத்தகைய நிலங்களை நிலமில்லாத விவசாயிகளிடையே பங்கிட்டது. சாகுபடி செய்யும் வேலையில் இறங்கினர் விவசாயிகள். நிலச்சுவான்தார்கள் சும்மா இருப்பார்களா?

### போர்க் கோலம்

புதிய "ஆடைகளை" உடுத்திக் கொண்டனர். புதிய "சட்டைகளை" போட்டுக்கொண்டனர். பங்களாக் காங்கிரசு, வலது கம்யூனிஸ்ட்கட்சி, பார்வர்டு பிளாக் ஆகியகட்சிகளில் உறுப்பினர்களாகச் சேர்ந்தார்கள். சேர்ந்து கொண்டு அரசினால் அளிக்கப்பட்டஉபரிநிலத்தில் சாகுபடி செய்த விவசாயிகளைத் துப்பாக்கி கொண்டு சுட்டார்கள். ஐ. மு. கட்சிளிடையே சண்டை நடப்பதாக தங்களது வர்க்க நலனைப் பாதுகாக்கும் வேலையை மாற்றினார்கள். இதனால் இறந்தவர்களில் பெரும்பாலோர் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகளும் மார்க்சிஸ்ட் ஆதரவாளர்களுமேயாவர். அகில இந்திய விவசாயிகள் மாநாட்டில் கொடுத்த விபரப்படி இப்படி இறந்த விவசாயிகள் எண்ணிக்கை 27 பேர்.

இந்த பயங்கரத் தாக்குதல்கள் எந்த அளவுக்குச் சென்றுள்ளதென்றால் இது வரை மே. வங்க மாநிலத்தில் ஏராளமான நிலப்பிரபுக்களுக்கு அளித்துள்ள துப்பாக்கி "லைசென்சு"களை அரசாங்கமே தலையிட்டு ரத்துச்செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்தில் கொண்டுபோய்விட்டது. அதன் பிறகு மே. வ. போலீஸ் பாதுகாப்புடன் விவசாயிகள் நிலத்தில் இறங்கி சாகுபடி செய்தனர். இன்றும் அதே போலீஸ் பாதுகாவலுடன் சாகுபடி நடந்து கொண்டிருக்கிறது மறந்துவிடாதீர்கள். போலீஸ் பாதுகாப்பு விவசாயிகளுக்கு. தமிழகத்தில் நடப்பது போல் அட்டூழியங்கள் புரியும் நிலச்சுவான்தார்களுக்கல்ல. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைமையிலுள்ள மே. வங்க. அமைச்சரவையின் இந்த சாதனை பங்களாக்காங்கிரஸ், பார்வர்டு பிளாக், வலது கம்யூனிஸ்டுக் கட்சியினருக்கு அடிவயிற்றில் புளியைக் கரைத்தது போன்றதாயிற்று.

### உயிர்ச்சேதம் ஏன்?

இலட்சோப இலட்சக்கணக்

(7-ஆம் பக்கம் பார்க்க)

## பீக்கிங் வானொலியும் ஈ. எம். எஸ். கேள்வியும்

இந்திய தேசியக் காங்கிரஸ் இரண்டாகப் பிளந்தது குறித்து பீக்கிங் ரேடியோ கருத்தறிவித்துள்ளது. காங்கிரசில் நடக்கும் சண்டை இரு பிற்போக்காளர்களின் போராட்டம் என்றும் இதில் புதுமை ஏதும் இல்லை என்றும் ஒரே வர்க்கத்தின் இரு பகுதிகளின் மோதுதல் இது என்றும் குறிப்பிட்டுள்ளது.

இவ்வாறு காங்கிரசில் நடக்கும் மோதலைப் பற்றி குறிப்பிடும் போது இதற்கும் இந்த நாட்டு மக்களுக்கும் சம்பந்தமில்லை, இதில் அக்கறை காட்டவேண்டிய அவசியம் இல்லை என்ற பாணியில் கருத்தறிவிப்பதை மார்க்சிய விமர்சனமாகக் கொள்ள முடியுமா?

காங்கிரஸ் கட்சிக்குள் இவ்வாறு ஒரு பெரும் போராட்டம் உருவாகியது ஏன், இவ்வாறு உருவாகியதின் சூழ்நிலை என்ன, அதன் பிரதிபலிப்புகள் விளைவுகள் என்ன என்பதை ஆராய்வதுமிகமிக அவசியமாகும். இந்த விஷயத்தில் முற்போக்காளர்கள் கவலை கொள்ள வேண்டியதில்லை என்று கூறுவதும் சரியாகாது.

இதற்கு ஒரு உதாரணம் சீன வரலாற்றில் உண்டு. அன்று சீனாவின் மிகப்பெரும் தேசியக் கட்சியாக இருந்த கோமின் டாங்கில் இன்று காங்கிரசில் ஏற்பட்டது போன்ற மோதுதல் ஏற்பட்டது. அப்போது சீனக் கம்யூனிஸ்ட் கட்சி ஒரு நிலை எடுத்தது. கோமின் டாங்கில் சியாங்கே ஷேக் தலைமையிலிருந்த ஒரு பிரிவுடன் சீனக் கம்யூனிஸ்ட் கட்சி கூட்டுச் சேர்ந்து அரசு அமைக்க முன்வருவது அவசியம் என்ற நிலையை சீனக்கட்சி அன்று எடுத்தது. இது அன்று வளர்ந்த நிலைமையைப் பற்றி சீனக் கட்சி அணுகிய நடைமுறை கொள்கைப் பார்வையாகும்.

இந்தியாவைப் பொறுத்த வரையில் இந்திய—சீன எல்லைத்தகாறு ஏற்படுவதற்கு முன்பு சீனக்கம்யூனிஸ்ட் கட்சி ஒரு நிலை எடுத்தது. அதாவது அன்றிருந்த நேரு அரசாங்கம் ஒரு முற்போக்கான அரசாங்கம் என்ற முடிவுக்குச் சீனக்கம்யூனிஸ்ட் கட்சி வந்தது.

ஆனால் அன்று ஒன்றுபட்டிருந்த இந்திய கம்யூனிஸ்ட் கட்சிகூட அன்றைய இந்திய நிலைமையைப் பற்றி அத்தகையதொரு முடிவுக்கு வரவில்லை. நேரு அரசை முற்போக்கு அரசு என்று கூற முன் வரவில்லை.

எனவே குறிப்பிட்டதொரு வர்க்க நிலையைப்பற்றி ஆழ்ந்த பரிசீலனையின்றி அரசியல் மாறுதல்களைப்பற்றி ஒரு முடிவு செய்வது சரியான மார்க்சீய அணுகும் முறையாக இருக்காது. ஒரு பிற்போக்கு வர்க்கத்தின் இரு பகுதிகளுக்கும் இடையே நடைபெறும் மோதுதலின் சூழ்நிலை என்ன, காரணம் என்ன, அதன் போக்குகள் என்ன என்பதைப்பற்றியெல்லாம் அலசி ஆராய்ந்து இன்றைய நடைமுறைக்குச் சாத்தியமான கோஷங்களை வகுப்பதே சரியான மார்க்சிய அணுகும் முறையாகும் என்று தோழர். ஈ. எம். எஸ். கேரள மாநிலக் கம்யூனிஸ்ட்கட்சி(மார்க்சிஸ்ட்)யின் தினஏடான தேசாபிமானியில் எழுதிய குறிப்பு ஒன்றில் சுட்டிக் காட்டியுள்ளார்.

# முரசொலியின் தலைகீழ் பார்வை

(6-ஆம் பக்கத் தொடர்ச்சி)

கான விவசாயிகள் நமது விவசாயிகள் அமைப்பின் கீழ் திரண்டார்கள். 20 இலட்சம் விவசாயிகள் சமீபத்தில் போர்சூலில் நடந்த விவசாய சங்க 20-ஆவது மாநாட்டில் திரண்டார்கள்.

இவ்வாறு நிலத்தைச் சாகுபடி செய்ய விவசாய சங்கத்தினர் செல்லும்போது, வலது கம்யூனிஸ்ட், பார்வர்டு பிளாக் பங்களாக் காங்கிரசு கட்சிகளில் உறுப்பினர்களாகச் சேர்ந்துள்ள நிலப்பிரபுக்கள் தாக்கினர். தாக்கப்படுவோர் சும்மா இருப்பார்களா? எதிர்த்து, பாதுகாப்பு நடவடிக்கை எடுக்க வேண்டிய அவசியம், ஏற்பட்டது. இதனால் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகளும் மற்றவர்களும் உயிர்ச் சேதத்திற்கு ஆளானார்கள்.

இந்த நிலைமைகளையெல்லாம் அங்குள்ள 14 கட்சிகளும் கூடி பரிசீலித்தன. உண்மை நிலவரங்களை ஆராய்ந்தன. இதற்கெல்லாம்காரணம்மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிதான் என்று பங்களாக் காங்கிரஸ் கூறிய கூற்றை வங்க ஐ. மு. ஏற்கவில்லை. நிராகரித்தது. கீழ்மட்டத்திலிருந்து மேல்மட்டம் வரை ஐ.மு. கட்சிகள் இணைந்து செயல்பட 7 அம்சத்திட்டம் ஒன்று வகுத்துள்ளது. அதன்படி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுகளும் ஏனைய கட்சிகளும் செயல்பட்டுக் கொண்டிருக்கும் போது தான் அஜாய்முகர்ஜியும் அவரது கட்சியும் ஐ. மு. அரசுக்கு எதிராக உண்ணாவிரத சத்தியாக்கிரகப் போராட்டம் நடத்த முன் வந்துள்ளார். இவ்வாறு ஐ மு.வைச் சீர்குலைக்கும் அடங்காப்பிடாரித்தனத்தைக் கண்டிப்பதற்குப் பதிலாக, முரசொலி, அஜாய் முகர்ஜியின் கட்சி ஏதோ சரியான வழியில் செல்வதுபோலவும், மார்க்சிஸ்டுகள் மட்டும் தான் தவறான வழிகளில் செல்கிறார்கள் என்பது போன்றும் எழுத முன் வந்திருப்பது விசித்திரமாக இல்லையா?

பொதுவாக, வலது கம்யூனிஸ்ட்டுகளும், சிண்டிகேட், சுதந்திரா, ஜனசங்கம் ஆகிய கட்சியினரும் கடைப்பிடிக்கும் மார்க்சிஸ்ட் எதிர்ப்பில் தானும் சேர்ந்து கொள்ளுவது ஒரு 'பேசன்' (Fashion) என்று முரசொலி எண்ணுகிறதா?

அல்லது தமிழகத்தில் தி. மு. க. அரசு சாதிக்க முடியாத ஒன்றை மே வங்கத்தில் மார்க்சிஸ்ட்கட்சி தலைமையில் உள்ள அரசு சாதித்து வருகிறதே என்ற எண்ணம் சாதாரண ஏழைஎளியமக்களிடையே ஏற்பட்டுவருவதால் ஏற்படும் பொறாமையா?

## தி.மு.க. ஆட்சியில்

தி. மு. க ஆட்சியில் கூலி உயர்வு கோரி போராடிய தொழிலாளிக்கு கிடைத்தது என்ன? குண்டடி! தடியடி! சிறைவாசம்! பூந்தாழங்குடி, திருவெற்றியூர், அரவங்காடு ஆகிய இடங்களில் நடைபெற்ற துப்பாக்கிச் சூடுகள்! பல கொலைகள்! கூலி உயர்வு கேட்டான் அத்தான் குண்டடி பட்டுச் செத்தான்; என்றுகாங்கிரஸ் ஆட்சியில தி.மு.க தயாரித்த போஸ்டர் இன்றைக்கும் பொருத்தமாகவே உள்ளது!

கூலி உயர்வு கேட்ட விவசாயிகளுக்குக் கிடைத்தது என்ன? 44 பேர்களை ஒரே வீட்டினில் பூட்டி, நெருப்பு வைத்து கூண்டோடு சாம்பலாக்கியது தான்!

கூலி உயர்வு கேட்ட விவசாயிகளுக்குக் கிடைத்த பதில் பூந்தாழங்குடி பக்கிரி, ராமச்சந்திரன், சின்னப்பிள்ளை சிக்கல் பக்கிரிசாமி போன்ற மார்க்சிஸ்டுகளின் படுகொலை தான்! கூலி உயர்வு கோரி சிறை சென்ற திருவேங்கடத்தைப் பிணமாகத் திருப்பித் தந்ததுதான்! இவையன்றி ஆர்ப்பாட்டம் மறியல் செய்பவர்களைப் பிடித்து லாக்கப்பில் வைத்து அடித்து நீசத்தனமாகத் துன்புறுத்துவது கொடுங்கோலரசர்களின்சிறைகளில் மக்கள் சித்திரவதை செய்யப்படுவதைப்பற்றி கலைஞர் கருணாநிதி உருவாக்கிய திரைப்படக் காட்சிகளை நினைப்பூட்டுகின்றது. காங்கிரஸ் ஆட்சியில் நடப்பது போன்றே தி. மு. க. ஆட்சியிலும் இன்றும் நடைபெற்று வருகின்றன.

இவ்வாறு, தொழிலாளர்கள் விவசாயிகளின் போராட்டங்களை தி. மு. க. ஆட்சி ஒடுக்குமுறைகளைக் கொண்டு அடக்கி வருவதை மூடிமறைக்க தமது தொழிலாளர்—விரோத போக்குகளை மூடி மறைப்பதற்காக மே. வங்க அரசைப்பற்றி முரசொலி அவதூறு பொழிய இவ்வாறு எழுதுகிறதா?

உரிமைக்காகப் போராடும் விவசாயிகளைப் பார்த்து "இரும்புக்கரம் கொண்டு அடக்குவேன்" என்கிறார் அமைச்சர் ப. உ. சண்முகம்.

இது இட்லர் பாணி அரசியல்! ஆனால்மே.வங்கத்தில்நடப்பது இப்படிப்பட்ட அரசியல் அல்ல!

## மேற்கு வங்கத்தில்

10 இலட்சம் தொழிலாளர்களுக்கு(இரண்டரை இலட்சம் தேயிலை தோட்டத் தொழிலாளர்கள், 2 லட்சம் சணல் ஆலைத் தொழிலாளர்கள். 60000 பஞ்சாலைத் தொழிலாளர்கள் உள்ளிட்டு) ரூ 15 லிருந்து 35வரைசம்பளஉயர்வு கிடைத்தது. சுமார் 30 கோடி ரூபாய் ஆண்டுதோறும் முதலாளிகளின் கைகளில் இருந்த கொள்ளைலாபப்பணம் தொழிலாளிகளின் கைக்கு மாறியுள்ளது. 'போலீசின் இரும்புக்கரங்களைக் கொண்டு போராடும் தொழிலாளர்களை அடக்குவேன் என்று மே வங்க போலீசு அமைச்சர் ஜோதிபாசு கூறியிருந்தால்-அமைச்சர் ப.உ. சண்முகம் வழியில் செயல்பட்டிருந்தால்-இந்தச் சாதனைகளை அங்கு சாதித்திருக்க முடியுமா? முடியவே முடியாது முதலாளியின் உபிருக்கும், உடைமைக்கும் பாதுகாப்பு அளிக்கிற அதே சமயத்தில் தொழிலாளர் விவசாயிகளது நியாயமான, அமைதியான போராட்டங்களில் போலீஸ் தலையிடாது என்ற கொள்கையைப் பின்பற்றிய காரணத்தினால்தான். அங்கு, வாழ்க்கையில் துன்பத்தையே ஆண்டாண்டு காலமாக அனுபவித்து வந்த உழைப்பாளிகள் சில சலுகைகளை இன்று பெற்றனர். முக மலர்ச்சி பெற்றனர்.

ஆனால் முரசொலியார் ஆட்சியில்நடப்பது வேறு. கொள்ளை இலாபமும் கள்ள மார்க்கெட்டும் செய்கின்ற முதலாளிகளுக்கும் நிலச்சுவான்தாருக்கும் முழுப் பாதுகாப்பும், ஒடுக்கப்பட்ட மக்கள் மீது அடக்கு முறைப் பாணங்களும் கட்டவிழ்ப்பது இங்குள்ள நடைமுறை!

அன்று வெள்ளைக்காரன் ஆட்சியிலும் அதன் பின் வந்த காங்கிரஸ் கொள்ளைக்காரன் ஆட்சியிலும் நடந்தது போன்றே தி.மு.க. ஆட்சியில் அமைதிக் காக்க விரும்புகிறார்களா? அது சுடுகாட்டில் காணும் அமைதி!

மே. வங்கத்தில், ஏழை எளியவர்களை அடக்கி ஒடுக்கி அதன் பேரில் உருவாகும் "சுடுகாட்டு அமைதி" என்பது அங்கில்லை! பல்லாண்டு பல்லாண்டாக ஏழை, எளியவர்களைவாட்டிவதைத்துசுரண்டிக்கொழுத்து வந்த அன்னிய உள்நாட்டு கொள்ளைக்கார முதலாளிகளையும் நிலப்பிரபுக்களையும் எதிர்த்துப் போராடி வருகிறார்கள் மக்கள். அதைக் கண்டு சுரண்டல் கூட்டத்திற்குத் துணையாக நிற்கவிரும்பும் அஜாய் முகர்ஜிகள் தொடை நடுங்குகிறார்கள்! உழைப்பாளர்களின் முன்னேற்றத்தை விரும்பாத அவர்கள் நடுங்கட்டும்! அவர்களுக்காக வக்காலத்து வாங்குபவர்கள் அலறட்டும்!

இந்த அலறலின்காரணமாக அங்குள்ள உழைப்பாளர்களின் போராட்டம் ஓயப்போவதில்லை. முரசொலி விரும்புகின்ற சுடுகாட்டு அமைதியும் அங்கு நிலவப்போவதில்லை! பசித்தவனின் பசி போக்கும் அமைதி அங்கு நல்ல முறையில் நிலைநாட்டப்பெற்று வருகிறது. இதற்காக உயிர்த்தியாகம் புரிந்த மார்க்சிஸ்டுகளும் அவர்களது ஆதரவாளர்களும்தான் அங்கு அதிகம்பேர் என்பதே உண்மை நிலவரம். முரசொலி நண்பர்கள் இதைப் புரிந்து கொண்டு தங்களது உபதேச வசைமொழிகளைத் தொடரட்டும்.

# சொக்கன் பஸ் தொழிலாளர் போனஸ் வெற்றி!

மதுரை சொக்கன் டிரான்ஸ்போர்ட் தொழிலாளர்கள் நடத்திய போனஸ்கிளர்ச்சியில் வெற்றி பெற்றார்கள்.

தீபாவளிக்கு மூன்றுமாத முழுச் சம்பளம் போனஸாக கிடைத்தது.

பேச்சுவார்த்தையில் மதுரை மோட்டார் தொழிலாளர் சங்கத் தலைவர்கள் கலந்துகொண்டார்கள்.

★★★★★★★★★★★★★★

### பாவலர் வரதராஜன் குமாரி ஆஷா

—★—

### இன்னிசை நிகழ்ச்சி

நவ. 23உ பாப்பாரபட்டி,
24. கிருஷ்ணகிரி,
25. அரூர்,
26. பாபிரெட்டிபட்டி,
27உ. முதல் டிசம்பர் 8உ வரை கோவை, நீலகிரி மாவட்டங்கள்.

★★★★★★★★★★★★★★

# திருத்துறைப்பூண்டித் தாலுகாவில் மார்க்சிஸ்ட் கட்சிக்கு ஆதரவு

திருத்துறைப்பூண்டி தாலுகாவிலும் நாகைத்தாலுகாவிலும் விவசாயத் தொழிலாளர்கள் மீதும், கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) மீதும் போலீஸ் அடக்குமுறை மட்டுமின்றி, மாணலூரில் போலீஸார் செங்கொடியை இறக்கி, தீ வைத்துக்கொளுத்திய காட்டுமிராண்டிச் செயலைக் கண்டித்தும் தஞ்சை மாவட்டம் முழுவதும் கண்டனக் கூட்டங்கள் நடந்து வருகின்றன.

திருத்துறைப்பூண்டித் தாலுகா உத்திரங்குடியில் சென்ற வாரம் கொட்டும் மழையிலும் ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடந்தது. கூட்டத்திற்கு தோழர். கே. கோவிந்தசாமி தலைமை வகித்தார். விவசாயிகள் இயக்கத்தலைவர்கள் ஏ. நடராஜன், என். மணியன். ஆர். கோவிந்தசாமி, வி. சம்பந்தம், வேதையன் ஆகியோர் போலீஸ் வன்செயலைக் கண்டித்துப்பேசினார்கள்.

சிறுபனையூரில் 23—10—69-ல் தோழர் செல்லத்துரை தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர்கள் கே.ஆர். ஞானசம்பந்தம் பி. எஸ். தனுஷ்கோடி, என். மணியன், ஆர். கோவிந்தசாமி, ஏ. கே. கணேசன், திருநாவுக்கரசு, முருகேசன், நடராசன், கூத்தபெருமாள் ஆகியோர் திருத்தல் வாதிகளின் துரோகங்களைக் கண்டித்துப் பேசினார்கள்.

## வலது சரிகிறது

அன்று மாலை தோழர்கள், கே. ஆர். ஜியும், தனுஷ்கோடியும் உதயமார்த்தாண்டபுரம், பின்னத்தூர், சிறுபனையூர் ஆகிய ஊர்களில் கொடி ஏற்றினார்கள். அதற்கான ஏற்பாடுகளைச் செய்தவர்கள் இதுவரை திருத்தல்வாத, வலது கட்சியில் இருந்தவர்கள் அக்கட்சியின் துரோகப் போக்கு பிடிக்காமல் மார்க்சிஸ்ட் கட்சி பக்கம் வந்துள்ளார்கள். கொடியேற்று விழாவில் கலந்து கொள்ளக் கூடாது என்று வலதுகள் தடுத்தும்கூட. 500-க்கு மேற்பட்ட விவசாயிகள் கலந்து கொண்டார்கள்.

அங்கு தோழர். செல்லத்துரையைத் தலைவராகவும், கூத்தப்பெருமாளை செயலாளராகவும் கொண்ட விவசாயிகள் சங்கமும் அமைக்கப்பட்டது.

———

# 20 லட்சம் மக்கள் திரண்டனர்

## ரூ.ஒரு லட்சம் கூட்டங்களில் வசூல் "தேசாபிமானி" மேலும் விரிவடைகிறது

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் அமைச்சரவையை பதவியிலிருந்து நீக்கிவிட்டால், அக்கட்சியின் செல்வாக்கு குறைந்துவிடுமென்று வலதுசாரி கம்யூனிஸ்ட்களும் அவர்களது எஜமானர்களான காங்கிரசும் கனவு கண்டார்கள். கூட்டு சேர்ந்து சதி செய்து, கூட்டணி அரசைக் கவிழ்த்தனர்.

சதிகாரர்கள் எதிர்பார்த்ததற்கு மாறாக, கேரளத்தில் புதிய நிலைமை உருவாகி வருகிறது. கிணறு வெட்ட, பூதம் கிளம்பிய கதையாக, பதவியை விட்டுக் கிழிறங்கிய பிறகு. பதவியில் இருந்தபோது திரண்ட மக்களைவிட பதவியில் இல்லாத இச்சமயத்தில் பல மடங்கு மக்கள் லட்சம் லட்சமாய்த் திரளுகிறார்கள்.

மாவட்டத் தலைநகர்கள் தோறும் தோழர். இ. எம். எஸ். க்கு பிரம்மண்டமான வரவேற்புகள் கொடுக்கப்பட்டன. இதுவரை நடந்த 10 கூட்டங்கனில் மட்டுமே, 20 லட்சம் மக்களுக்கு மேல் திரண்டனர் என்று "தேசாபிமானி" செய்தியொன்று கூறுகிறது.

கோயங்கா பத்திரிகையான இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகை கோட்டயம் கூட்டத்தைப் பற்றி விளக்குகையில், "இதுவரைகேரளவரலாற்றிலேயே கண்டிராத பிரம்மாண்டமான கூட்டம்" கூடியதாக எழுதியுள்ளது.

இந்தக் கூட்டங்களில் வசூலான கட்சி நிதி பற்றிய விபரங்களையும் தேசாபிமானி வெளியிட்டிருக்கிறது. மொத்தம் 10 கூட்டங்களில் ரூ 1 லட்சம் வசூலாகி இருக்கிறது.

எர்ணாகுளத்திலிருந்து வரும் "தேசாபிமானி" பத்திரிகையானது, மக்களின் தேவையை நிறைவு செய்யமுடியாதிருப்பதால், புது ரோட்டரி இயந்திரம் (ஒரு மணிக்கு 20 ஆயிரம் பிரதிகள் அச்சடிக்கும் இயந்திரம்) வாங்கித்தர கேரள மாநிலக் கமிட்டி முடிவு செய்துள்ளது.

இதற்காகவும், கட்சி வேலைகளை விரிவு படுத்துவதற்காகவும் ரூ. 5 லட்சம் நிதிதிரட்ட கேரள மாநிலக் குழு முடிவு செய்துள்ளது.

# விவசாயிகள் இயக்கத்தின் முன்னுள்ள கடமைகள்

## அ. இ. விவசாயிகள் மாநாட்டில் பொதுச் செயலாளர் தோழர் கோனார் அறிக்கை

நாட்டின் இன்றைய நெருக்கடி முற்றிவரும் நிலையில் பொருளாதார அரசியல் அமைப்பில் அடிப்படை மாற்றத்தைக் கொண்டுவரும் பிரச்னை முன்னிலைக்கு வந்துள்ளது. உடனடி அன்றாடப் பிரச்னைகள் எவ்வளவு முக்கியத்துவமுடையதாக இருந்தபோதிலும் அரைகுறை நடவடிக்கைகள் மட்டும் இன்றைய நெருக்கடியை தீர்த்துவிட முடியாது. ஆளும் வர்க்கங்களின் ஒருபகுதி, மக்களை ஏமாற்றுவதற்கான புதிய திட்டங்களை முன்வைத்துள்ளது. பாங்குகளைத் தேசியமயமாக்கியிருக்கும் நடவடிக்கை அத்தகைய திட்டங்களில் ஒன்றாகும். மிகவும் பிற்போக்கு சக்திகள் தங்களுடைய சீர்குலைவுப் பிற்போக்குத் திட்டங்களை முன் வைத்துள்ளன. இத்தகைய நிலைமையில் விவசாயிகள் இயக்கம் அன்றாடப் பொருளாதாரப் போராட்டங்களில் மட்டும் நின்றுவிட முடியாது. விவசாயப் பெருங்குடி மக்களுக்கு அரசியல் போதமளிக்க வேண்டும். அன்றாடப் போராட்டங்களில் தங்களுடைய சொந்த அனுபவத்தின்மூலம் ஆளும் வர்க்கங்களின், மற்ற பிற்போக்கு சக்திகளின் கொள்கைகளின் வர்க்கத் தன்மையைப் பற்றியும்இக்கொள்கைகளிலும் அரசியல் அமைப்பிலும் அடிப்படை மாறுதல் செய்யவேண்டிய அவசியம் பற்றியும் விவசாயப் பெருங்குடி மக்களுக்குப் போதனையளிக்க வேண்டும். அரசியல் போராட்டங்களில் அவர்கள் பங்கு கொள்ளத் தக்கவிதத்தில் எண்ண ரீதியாகவும் ஸ்தாபன ரீதியாகவும் அவர்களைத் தயார்படுத்த வேண்டும். இல்லாவிட்டால் அரசியல் தந்திரோபாயங்களுக்கும் அல்லது ஆளும் வர்க்கங்களின் பிற்போக்கான தாக்குதல்களுக்கும் அவர்கள் பலியாகி விடுவார்கள். மிகவும் பிற்போக்கு சக்திகளின் சூழ்ச்சிகளை ஸ்திரமான முறையில் எதிர்த்துப் போராட வேண்டியது இன்று மிகவும் அவசியமாகும்.

### நிலச் சீர்திருத்தப் பிரச்னை முன்னுக்கு வந்துள்ளது

ஆனால் அரசியல் போதனையையும் அரசியல் போராட்டங்களில் பங்கு கொள்ளச் செய்வதையும் விவசாயி வர்க்கத்தின் அன்றாடப் போராட்டங்களிலிருந்தும் கோரிக்கைகளிலிருந்தும் தனியாகப் பிரித்துவிட முடியாது. விவசாயிகள் தங்களுடைய அனுபவத்தின் மூலமே கற்றுகொள்ளுகிறார்கள். பிரச்சாரம் அவற்றை புரிந்துகொள்ளுவதற்குஉதவுகிறது நாட்டின் நெருக்கடி நிலச்சீர்திருத்தப் பிரச்னையை முன்னுக்குக் கொண்டுவந்துள்ளது.

நம்முடைய சென்ற மாநாட்டில் தரிசு நிலங்களுக்கான போராட்ட கோஷத்தை எழுப்பினோம். பல மாநிலங்களில் அது நிலப்பிரச்னைக்கான போராட்டத்தை வளர்த்துள்ளது—சிலமாநிலங்களில் தரிசு நிலப்பிரச்னைக்கு மேலாகவும் அது சென்றுள்ளது.உபரி,பினாமி நிலப்பிரச்னைகள் மீதும் போராட்டங்கள் வெடித்துள்ளன. இப்போது அகில இந்திய ரீதியில் தீவிர நிலச்சீர்திருத்தப் பிரச்னையை எழுப்பவேண்டிய தருணம் வந்துள்ளது. இதில் கீழ்வரும் கோரிக்கைகள் இடம் பெறும் (1) எந்த விதிவிலக்குமின்றி உச்சவரம்பு (2)விவசாய ஸ்தாபனங்களின் தீவிர ஒத்துழைப்புடன் துரிதமாக அமுல்படுத்தல் (3) அரசியல் சட்டத்துக்குத் தேவையான திருத்தம். இந்தப் பிரச்னைகளில் ஒவ்வொரு மாநிலத்திலும் இயக்கம் நடத்தவேண்டும். அதே சமயம் வெறும் இயக்கத்துடன் விவசாயிகள் சங்கம் சும்மாயிருக்கக் கூடாது முடிந்தவரை தரிசு,உபரி,பினாமி நிலங்களை வினியோகிப்பதற்கான விவசாயிகளின் போராட்டத்தை அது நடத்தவேண்டும், வெவ்வேறு மாநிலங்களின் திட்டவட்டமான நிலைமைகளுக்கேற்ப போராட்டங்கள் அமையவேண்டும்.

### கடமைகள்

பாங்குகள் தேசியமயத் திட்டத்தை மக்களை ஏமாற்றுவதற்காக ஆளும் வர்க்கங்கள் பயன்படுத்துகின்றன. இந்த நிலைமையில் விவசாயசங்கம் தலையிட்டு கீழ் வரும் திட்டவட்டமான கோஷங்களைக் கொடுக்க வேண்டும் (1) அந்நிய பாங்குகள் உள்ளிட்டு எல்லா பாங்குகளையும் தேசியமயமாக்கவேண்டும். அதன் பெரும்பகுதி பணம் சாதாரண விவசாயிகளுக்குக் கிடைக்க வேண்டும். (2) பெரியதொழில்கள், தோட்டங்கள், அந்நிய வர்த்தகம் ஆகியவற்றை தேசியவுடைமை யாக்கவேண்டும். (3) அந்நியக்கடன்களைத் திருப்பிக்கொடுப்பதை நிறுத்தி வைக்கவேண்டும், (4) தீவிர நிலச்சீர்திருத்தம் செய்யவேண்டும். (5) ஸ்திரமான விலையில் தானிய, வர்த்தகப்பயிர்களில் அரசாங்க மொத்தவியாபாரம் செய்ய வேண்டும் (6) ஜனநாயக உரிமைகளை விஸ்தரிக்க வேண்டும்.

வர்க்க சமூகம் நெருக்கடியில் ஆழ்ந்துவரும்போது அடக்குமுறையைத்தவிர வகுப்புவாத, பிராந்திய வெறிமற்றசீர்குலைவு நடவடிக்கைகளிலும் இறங்குகிறது. இத்தகைய வகுப்புவாத அல்லது பிராந்திய சக்திகளுக்கும் அல்லது போக்குகளுக்கும் எதிராக விவசாயசங்கம் போராட்டங்களை நடத்த வேண்டும். நிலப்பிரபுக்களிடமிருந்து வரும் அடக்கு முறை மிரட்டலையும் தாக்குதல்களையும் சமாளிப்பதற்கு ஸ்தாபன பலத்தைக் கட்டுவதற்கு விவசாயசங்கம் விசேடக் கவனம் செலுத்த வேண்டும் ஸ்தாபன அமைப்புக்குள் மேலும் மேலும் அதிக எண்ணிக்கையில் விவசாயிகளையும் விவசாயத் தொழிலாளர்களையும் கொண்டுவர வேண்டும். தேவையான தொண்டர் படையையும் அமைக்கவேண்டும். விவசாயி வர்க்கம் ஜனநாயக சக்திகளின் ஒருபகுதியாகயிருந்து எதிர்பாராத நிலைமை எதுவும் உருவாக முடியாதபடி பார்த்துக் கொள்ளவேண்டும்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## கேரள விவசாயிகளின் வெற்றிக் கொடி!

கேரளத்தில் ஐ. மு. அமைச்சரவை ஏற்பட்டதனால், கேரள விவசாயத் தொழிலாளர்கள் 7 மணி நேரம் வேலைசெய்கிறார்கள். பெண்கள் 3 ரூபாயும் ஆண்கள் 4 ரூபாயும் கூலியாகப் பெறுகிறார்கள்.

அவர்கள் வேலைசெய்யும் இடங்களில் செங்கொடி ஏற்றியவுடன் வேலைக்குச் செல்கின்றனர். செங்கொடியை இறக்கியவுடன் வேலையை முடித்து வீடுகளுக்குத் திருப்புகிறார்கள். இவ்வாறுதான் அங்குள்ள விவசாயத் தொழிலாளர் செங்கொடிச் சங்கத்தின் வழிகாட்டுதலில் வேலைக்குச் சென்று வருகிறார்கள்.

கேரளத்தில் உள்ள நிலத்தை கேரள மக்கள் அனைவருக்கும் பிரித்துக் கொடுத்தால் 1 நபருக்கு 27 சென்ட் நிலம் தான் கிடைக்கும்.

நிலச்சீர்திருத்த(திருத்த) மசோதா நிறைவேறிய போதுதான் ஐ. மு. அரசின்மீது தாக்குதல் தொடுக்கப்பட்டது; கவிழ்க்கப்பட்டது.

இப்போது கேரளத்தில் விவசாயத் தொழிலாளர் சங்கமும் விவசாயிகள் சங்கமும் பலம் பெற்றுள்ளன. விவசாய தொழிலாளர் சங்கத்தில் 3 இலட்சம் அங்கத்தினர்களும் விவசாய சங்கத்தில் 1 இலட்சம் அங்கத்தினர்களும் உள்ளனர். மொத்தம் 4 இலட்சம் அங்கத்தினர்கள் உள்ளனர். சங்கத்திற்குத் தனித்தனி அலுவலகம் உள்ளது. இயக்கம் பலமாக நடந்து வருகிறது.

[அ இ வி. ச. மாநாட்டின் விவாதத்தில் கலந்து கொண்ட கேரளப் பிரதிநிதி குஞ்சுக்கண்ணன் குறிப்பிட்டது]

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## மதுரையில் பிரஸ் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம்

மதுரை,பைகாராவில் உள்ள ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ், உஷா பிரிண்டர்ஸ்,ஸ்ரீகிருஷ்ணு போட்டோ மவுண்ட் சர்வீஸ் ஆகிய மூன்று ஸ்தாபனங்களில் உழைக்கும் தொழிலாளர்கள் தீபாவளி போனஸ் கோரி 1-11-69-ந் தேதி முதல் உள்ளிருப்புவேலைநிறுத்தம்செய்தனர் வேலை நிறுத்தத்தை மதுரை ஜெனரல் ஓர்க்கர்ஸ் யூனியன் முன் நின்று நடத்தியது.

———

## வீட்டுவரிஉயர்வை எதிர்த்து போடியில்கிளர்ச்சி

போடியில் நடுத்தர மக்களுக்கும் ஏழை மக்களுக்கும் வீட்டுவரியைஉயர்த்திவிட்டார்கள்.

இதைகண்டித்துமார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி நகர்மன்றத்தின்முன்பாக மாபெரும் ஆர்ப்பாட்டம் நடத்தியது.

நகர்மன்றக் கூட்டத்தில் கம்யூனிஸ்ட்கட்சி(மார்க்சிஸ்ட்) உறுப்பினர் பொன்னம்மாள் வரி உயர்வை ரத்துசெய்ய வேண்டு மென்று தீர்மானம் கொண்டுவந்தார். தி. மு. க. சேர்மன் அதை ஏற்க மறுத்து விட்டார்.

தி. மு. க. தவிர மற்ற எல்லா கட்சிகளும் வரிஉயர்வைக் கண்டிக்கின்றன.

—★—

## கால்நடை உதவியாளர் கிளர்ச்சி

தமிழகமெங்குமுள்ள அரசினரின் கால்நடை உதவியாளர்கள் தம் கோரிக்கைகளைப் பெற பெரும் கிளர்ச்சிகளில் இறங்கியிருக்கிறார்கள். அவர்கள் கோருவது என்ன?

8 ஆண்டு உழைப்புக் காலம் முடிந்த 2-ஆம் நிலை கால்நடை உதவியாளர்களுக்கு பதவி உயர்வு கொடுக்கவேண்டும்.

1ஆம் நிலைகால்நடைஉதவியாளர்களுக்கு பதவிஉயர்வுபெற்றவர்களுக்கும், டிப்ளமாபெற்றவர்களுக்கும் உள்ள அடிப்படைச் சம்பளத்தின் வித்தியாசத்தை நீக்கவேண்டும்.

வேலை நிர்ணயத்தை வரையறுக்க வேண்டும். பி. வகுப்பு வெட்டினரி பிராக்டிஷனர் உரிமைகள் வழங்கிடவேண்டும் மேற்படிப்பு வசதி—பதவி நிரந்தரம்—பொதுவிடுப்பு நாட்களில் பணிபுரிவோருக்கு, ஈடு செய்யும் விடுப்பு வேண்டும். இரகசியக் குறிப்பேட்டை ஒழித்திட வேண்டும்.

மேலேகண்ட கோரிக்கைகளுக்கு அரசினரிடமிருந்து சாதகமான பதில் வராததால், மே மாதம் 3 நாட்கள் கோரிக்கை தினம் கொண்டாடினார்கள்.

அரசின் கவனத்தை மீண்டும் ஈர்க்க ஒவ்வொரு கால்நடை உதவியாளரும் 10—11—69 முதல் தொடர்ந்து 21 நாட்களுக்கு அஞ்சலட்டை இயக்கம் நடத்துகிறார்கள்.

———

## பம்பாயில் பி. ஆர். மணி விழா

பம்பாய் தாராவி அபுபக்கர் சாலில் உள்ள ஜீவா படிப்பகத்தாரும், எஸ். எஸ். கே சாலில் தனிக்குழு அமைத்தும் மிக விமரிசையாக 2-11-69-ல் பாட்டாளிவர்க்கத்தின் ஒப்பற்ற தலைவர் தோழர் பி. இராமமூர்த்தி எம். பி. அவர்களின் மணிவிழா கொண்டாடினார்கள். இவ் விழாவிற்கு தோழர் டி. எம். அரசுமியாகான் தலைமை வகித்தார்,

தோழர் ஏ. எம். காதர் செங்கொடி ஏற்றிவைக்க, தோழியர் பத்மாகிருஷ்ணமூர்த்தி பி.ஆர். படத்தை திறந்துவைத்து பேசினார்.

தோழர் பி.ஆர். அவர்களின் தியாக வாழ்க்கையையும், கட்சித மேலும் மேலும் வளர்ச்சியும் செம்மையும் பெற அவர்கள் பல்லாண்டு வாழ வாழ்த்து கூறியும், கேரளத்தில், திரிபுவாதிகளின் வர்க்கவிரோத காங்கிரஸ் சரணாகதி போக்குகள் பற்றி கடுமையாக விமர்சித்தும் தோழர்கள் கே. எஸ். கணேசன, ஞானையாநீல், பூசிக், கே. பி. ராசன், கே. எஸ். முத்துலிங்கம். எஸ். கே. கான். எஸ் கனகராஜ், ஆகியோர் சிறப்புரை யாற்றினார்கள். அனைவருக்கும் இனிப்புகள் வழங்கப்பட்டன. தோழர் கே. எம் ஜமால் நன்றிகூற விழாவின் காலை நிகழ்ச்சி முடிவுற்றது.

மாலையில் பம்பாய் ஜீவா படிப்பகம் சார்பில் தோழர் வி. கே. முகம்மது தலைமையில் பத்மாகிருஷ்ணசாமி கொடியேற்றி வைக்க எஸ். கனகராஜ் தோழர் பி. ஆர். அவர்களின் திருஉருவப் படத்தை திறந்து வைத்தார்.

தமிழகத்தில் உள்ள தலைவர்களில் தியாகத்தின்குன்றெனத் திகழும் மாபெரும் மக்கள் தலைவர் தோழர் பி. ஆர். அவர்களின் சிறப்பை பற்றியும் வலது திருத்தல்வாதிகளின் போலித்தனத்தை விமர்சித்தும் சிறப்பாக தோழர்கள் எம். டி. கிருஷ்ணசாமி, கே. எஸ். கணேசன், ஜே. வி. ஞானையாநீல், எம். பூசிக், மா. பா. வீரபாண்டியன், ஏ எஸ். ஹமீது, கே. ஜமால், கே. எம். மீரான், பி. மம்மது மற்றும் பலர் சொற்பொழிவாற்றினார்கள்.

தோழர் சாகுல் அமீது நன்றி கூற மணிவிழா இனிது முடிவுற்றது.

———

# குறிப்புகள்

# முரசொலியார் கவனத்துக்கு!

மேற்குவங்கத்தில் சட்டம் அமைதி குலேந்துவிட்டது என்றும் அரசியல் படுகொலேகள் நடந்த வண்ணமாகவுள்ளது என்றும் முதலாளிவர்க்கப் பத்திரிகைகள் கூச்சல்போடாத நாளேயில்லே. கொல்லப்படுபவர்கள் எல்லாம் மார்க்சிஸ்ட் அல்லாதார் என்றும் கொலே செய்பவர்கள் எல்லாம் மார்க்சிஸ்ட்டுகள் என்றும் தமிழ்நாட்டிலிருந்து வெளிவரும் ஒரு தி. மு. க. தினசரி தலேயங்கம் தீட்டிற்று. ஆனல் உண்மை என்ன?

இந்த ஆண்டில் மேற்கு வங்கத்தில் ஐ. மு. அமைச்சாவை அமைந்தபின் பிஞமி நிலங்களே (நிலப்பிரபுக்கள் போலியாக வேறு நபர்கள் பெயரில் பதிந்து வைத்திருக்கும் நிலங்கள்) விவசாயிகள்மீட்பது வேகமடைந்தது. 24 பர்காஞ மாவட்டத்தில் மட்டும் 110000 ஏகர் நிலம் மீட்கப்பட்டது.

இந்த நிலம் மீட்கப்பட்ட சமயத்தில் நிலச்சுவான்களிடமிருந்து எதிர்ப்பு வரவில்லே. ஆனல் இப்போது அறுவடை தொடங்கும் சமயத்தில் நிலச்சுவான்தார்கள் துப்பாக்கிகளேயும் பிறஆயுதங்களேயும்கொண்டு தாக்குதல் தொடுப்பது கிராமங்களில் அன்ருடநிகழ்ச்சியாகியுள்ளது.

1969 அக்டோபர் 23-ஆம் தேதி நாகர்ஹத்தி என்ற கிராமத்தில் விவசாயிகள் இயக்க ஊழியரும் ஏழை விவசாயிமான தோழர் சகிம் மோல்லா நிலச்சுவான்தார்களால் சுட்டுக் கொல்லப்பட்டார்.

இதற்கு முந்தினநாள் இரவு 10 மணிக்கு இந்தப் பகுதியைச்சேர்ந்த பங்களா காங்கிரஸ் வலது கம்யூனிஸ்ட், பார்வர்ட் பிளாக்கட்சியைச் சேர்ந்தவர்கள் ஸ்தல விவசாயிகள் சங்கத் தலேவரான அபூர்பசிங் வீட்டைக் கொள்ளேயடித்தனர். அவருடைய குளத்திலிருந்த மீன்களே யெல்லாம்கவர்ந்து சென்றனர். இந்தக் கொள்ளேக்கூட்டத்திடம் துப்பாக்கிகளும் மற்ற ஆயுதங்களும் இருந்தன.

மறுநாள் அபூர்பசிங்கின் வீட்டுக்கு விவசாயிகள்சங்க ஊழியர்கள் ஊர்வலமாகச் சென்றபோது அவர்கள் மீது எல்லாத்திக்குகளிலிருந்தும் துப்பாக்கியால் சுடப்பட்டது. அதையும்மீறி விவசாயிகள் சங்க ஊழியர்கள்பூஅர்பசிங்கின்வீட்டையடைந்தபோது மேற்குறிப்பிட்ட கட்சிகளேச் சேர்ந்தவர்கள் கதவையுடைத்து தாக்குதல் தொடுத்தார்கள். தோழர் சகிமை நேருக்குநேர் சுட்டுக்கொன்ருர்கள். மற்றும் 12 தோழர்கள் கடுங்காயங்களுடன் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருக்கின்றனர்.

இந்தக் குற்றவாளிகளின் பெயர்கள் ஹரோ போலீஸ் நிலேயக் குறிப்பேட்டில் பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்தக் கும்பலில்உள்ளவர்கள் நிலச்சுவான்தார்களும் அவர்களுடைய அடியாட்களுமாவர். இவர்கள் எல்லாம் முன்பு காங்கிரசில் இருந்தார்கள். இப்போது பங்களா காங்கிரசிலும், பார்வர்ட் பிளாக்கிலும், வலதுகம்யூனிஸ்ட் கட்சியிலும் சேர்ந்துள்ளனர்.

இந்தச் சம்பவத்தில் இக்கும்பலேச் சேர்ந்த ஒருவர்கூட காயமடையாதபோது மறுநாள் பூர்சுவா பத்திரிகைகளில் பங்களா காங்கிரசுக்கும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்களுக்கும் இடையேமோதல் ஏற்பட்டதாகச்செய்திவெளிவந்திருக்கிறது

1969 நவம்பர் 4-ஆம் தேதி முக்சிகோலா கிராமத்தில் விவசாயிகள் சங்க ஊழியர் தோழர் பங்காசர்தார் நிலச்சுவான்தார்களின் கையாட்களால் படுகொலே செய்யப்பட்டார்.

கோபால் தலால் என்ற நிலச்சுவான்தாரரின் நிலத்திலிருந்து நெல்லே அறுத்துச் செல்லுவதற்கு குத்தகைதாரரும், தோழர் பங்கா உள்ளிட்ட விவசாயிகளும் எதிர்ப்புக் காட்டியதே இந்தப் படுகொலேக்குக்காரணமாகும்.

1969 நவ. 3-ம் தேதி தெகளியா கிராமத்தில் விவசாயிகள் சங்க ஊழியர் தோழர் ஸ்ரீதம் மண்டலின் வீடு தாக்கப்பட்டது. வீட்டுக்குத் தீவைத்து அடியோடு எரிக்கப்பட்டது.

நவம்பர் 4-ம் தேதி துதுர்தகா கிராமத்தில் விவசாயசங்க ஊழியர் போலநாத் மண்டல் படுகொலே செய்யப்பட்டார், அவருடைய சடலம்பங்களா காங்கிரசைச்சேர்ந்த நிலச்சுவான்தார் கோபிபால சர்க்கார் தோட்டத்தில் கிடந்தது. தோழர் போலநாத்மண்டலே நிலத்திலிருந்து வெளியேற்ற முடியாததே அவருடைய கொலேக்குக் காரணமாக :அமைந்தது என்று கருதப்படுகிறது.

நவ. 6–ஆம் தேதி மதுசூந்தன்பூர் கிராமத்தில் அறுவடை செய்துவிட்டு வீடு திரும்பிக் கொண்டிருந்த குத்தகைதாரர்கள் திடீரென தாக்கப்பட்டனர். கடும் காயங்களுடன் ஆறுபேர் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருக்கின்றனர்.

நவ 8-ஆம் தேதி பவானிபூரில் விவசாய இயக்க ஊழியர் கூட்டத்தின் மீது வலதுசாரிக் கம்யூனிஸ்டுகள் தாக்கினர். அதில் படுகாயமுற்ற நால்வர் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டனர். அவர்களில் ஒருவரான தோழர் தாராபாதமாலி பின்னர் இறந்தார்.

நவ. 3-ஆம் தேதி சண்டேஷ்காளி கிராமத்தில் அறுவடை செய்துகொண்டு திரும்பிய விவசாயிகள்மீது சுடப்பட்டதில் ஆறுபேர் காயமடைந்தனர்.

சென்ற அக்டோபர் கடைசியில் காகாதிலிப் என்ற இடத்தில் வலதுசாரிக் கம்யூனிஸ்டுகள் ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடத்தினர். அந்த ஊர்வலத்தின்முன் செங்கொடி ஏந்திக்கொண்டு சென்றவர்கள் யார் தெரியுமா? பேர் போன நிலச்சுவான்தார்கள்ஆவர். அவர்களில் சிலருடைய பெயர்கள் வருமாறு கோகில்கான், ரதின்தின்டா, புசன்மெய்தி, பராஜ்பதிகாஸ், பிமர்பெரா, பலராம்ஜஞ, நில்கண்ட சந்திராவின் புதல்வர்கள், சந்தோஷ்தாஸ். இவர்களெல்லாம் முன்பு காங்கிரஸ்கட்சியிலிருந்தவர்கள்.

நவம்பர் முதல் தேதி சோஞர்பூர் பகுதியைச் சேர்ந்த பிரசாத்பூரில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி ஊர்வலம் ஒன்று தாக்கப்பட்டது. இதற்காக நூறுபேருக்கு அகோர்மண்டல என்ற நிலப்பிரபு வயிறு புடைக்க சாப்பாடுபோட்டு மதுவும் வழங்கிஞர்.

இந்தத் தாக்குதலேயடுத்து ஏற்பட்ட மோதலில் குஞதர் மண்டலும், அவருடைய தகப்பஞர் நில்கமல் மண்டலும் சம்மி என்ற மற்ருெரு நபரும் கொல்லப்பட்டனர். இவர்களேத்தான் வலதுசாரிக் கம்யூனிஸ்ட்கட்சி தன்னுடைய கட்சியினர் என்று கூறிக்கொள்ளுகிறது. குஞதர்மண்டலும் அவருடைய தகப்பஞரும் சமூக விரோதிகள் என்று பெயபெற்றவர்கள். 1966-ல் மார்க்சிஸ்ட்கட்சி ஊழியர் பிம்நாஸ்கர் கொலே சம்பந்தமான இவர்கள் இருவர்மீதும் வழக்கு நடைபெற்றது. இதே நிலப்பிரபு அகோர்மண்டலின் நிலத்தகராறை யொட்டியே இந்தக் கொலே நடந்தது

சம்மி புத்திசுவாதீனமில்லாதவன் என்பதை வலது கம்யூனிஸ்டுகளே ஒப்புக்கொள்ளுகின்றனர். அதஞல் தான் அவனுடைய கையில் திரவப் புட்டிகளேக் கொடுத்து மார்க்சிஸ்ட் கட்சி ஊர்வலத்தின் மீது வீசச்செய்திருக்கின்றனர்.

இந்த உண்மைகளே யெல்லாம் மூடிமறைத்து விட்டுத்தான் முதலாளித்துவப் பத்திரிகைகள் பொய்ப்பிரசாரம் செய்கின்றன. ★

—ஆ ச, சுந்தரம்

## காங்கிரஸ் பிளவு உறுதி............

(4-ம் பக்க தொடர்ச்சி)

பியுள்ள சில கோஷங்களின் விளேவுகள் எப்போதும் அவர்கள் விரும்பிய மாதிரியேயிருக்காது என்பதையும் நாம் உணர வேண்டும். அவை மக்களிடையே சில ஆசைகளே உருவாக்குகின்றன. இந்த ஆசைகள் நிறைவேற்றப்படா விட்டால் இவற்றை நிறைவேற்றுவதற்காகப் போராடவும் மக்கள் முன் வருகிருர்கள்.

இவ்வாறுமக்களேப்போராட ஊக்குவிப்பது ஜனநாயக இயக்கத்தின் கடமையாகும். இறுதியாக வரலாற்றை உருவாக்குபவர்கள் மக்களே தவிர எவ்வளவுதான் உயர்ந்த நிலேயில் வைக்கப்பட்டிருந்தாலும் ஒரு சில தலேவர்களல்ல.

———

## செங்கோட்டையில் உணவு ஆர்ப்பாட்டம்

கம்யூனிஸ்ட்கட்சி(மார்க்சிஸ்ட்) விவசாயிகள் சங்கம், கைநெசவுத் தொழிலாளர் சங்கம் ஆகியவை சார்பில் 3-11-69-ல் செங்கோட்டை வீதிகளில் 100 பேர் உணவு கோரி ஆர்ப்பாட்டம் செய்தார்கள்.

சாம்பவர் வடகரையிலிருந்து ஆர்ப்பாட்டக்காரர்கள் புறப்பட்டு, 11 மைல் தூரம் நடந்தே சென்று, செங்கோட்டையில் தோழர் சி.காளிமுத்து தலேமையில் ஊர்வலம் சென்ருர்கள்.

விலேவாசி உயர்வைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றும். நூல் விலேயைக் கட்டுபடுத்துமாறும், விசைத்தறியைப் புகுத்தக் கூடாது என்றும், நாள் ஒன்றுக்கு நபர் ஒன்றுக்கு 1200 கிராம் அரிசி கொடுக்கவேண்டுமென்றும், நாற்றமில்லாத நல்ல அரிசி போடவேண்டுமென்றும், எல்லா நாட்களுக்கும் எல்லா கார்டுகளுக்கும் அரிசிகொடுக்க வேண்டுமென்றும் மகஜரில் வற்புறுத்தியுள்ளனர்.

—★—

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## நவம்பர் புரட்சி மலர்

**தோழர்களே !**

பல தோழர்களும், ஏஜென்டுகளும் முன்பணம் அனுப்பாமல் நவம்பர் புரட்சி மலர் கேட்டு எழுதிஞர்கள்.

எங்கள் கை வசம் இன்னும் பிரதிகள் உள்ளன.

பிரதி ஒன்றுக்கு ரூ. 1 வீதம், ஐந்து பிரதிகளுக்கு மேல் வாங்குவோர் 25 சத விகிதம் கமிஷன் கழித்து முன் பணம் அனுப்பி தேவையான பிரதிகளேப் பெற்றுக் கொள்ளவும்.

நிர்வாகி,

தீக்கதிர்.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## அதிராம் பட்டிணத்தில் மாணவர் சங்க அமைப்புக்குழு கூட்டம்

தஞ்சை மாவட்டம், அதிராம் பட்டினத்தில் அகி. 24–ஆம் நாள் தமிழக மாணவர் சங்கத்தின் அமைப்புக் குழுக் கூட்டம் நடைபெற்றது. 30 மாணவர்கள் கலந்து கொண்டனர். சங்க மாநில உதவிச் செயலாளர் தோழர் வே. பரமேஸ்வரன் சங்க நோக்கங்கள், செயல் முறைகள் பற்றி விரிவாக விளக்கிப் பேசிஞர்.

## அவனியாபுரம் தோழர் ஆர். கார்மேகம் காலமாஞர்

மதுரைத் தாலுகா அவனியாபுரம் மக்கள் தலேவரும், அனேத்துக் கட்சியினரின் அன்பையும் மதிப்பையும் பெற்றவரும், விவசாயிகள் தொழிலாளர்கள் இயக்கங்களில் தீவிரப் பங்குகொண்டவரும் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்ஸிஸ்ட்) யில் 15 ஆண்டுகளாக உறுப்பினராக இருந்தவருமான தோழர் ஆர். கார்மேகம் 12-11-69-ல் மாரடைப்பால் காலமாஞர். அதிர்ச்சியுற்ற அவனியாபுரம் மக்கள் அனேவரும் கண்ணீர்விட்டார்கள்.

காலஞ்சென்ற தோழர் விவசாய அறப்போரிலும், மத்திய அரசின் பட்ஜெட் எரிப்புப் போராட்டத்திலும் 1965-இல் பாதுகாப்பு கைதிகளாகச் சிறையில் இருந்த கம்யூனிஸ்ட் தலேவர்களே விடுதலே செய்ய வேண்டுமென்ற கிளர்ச்சியின் போதும் சிறை சென்றிருக்கிருர்.

அவரது மரணச் செய்தி கேட்டு, கட்சியின் மாநிலக் குழு உறுப்பினர்கள் இரங்கற் செய்தி அனுப்பியிருந்தார்கள்-

இறுதிச் சடங்கின் போது மதுரைத் தாலுகா விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் கே.சுப்பையாதலேமையில் நடந்த இரங்கற் கூட்டத்தில், மதுரைப் பஞ்சாலேத் தொழிலாளர் சங்கச் செயலாளர் தோழர். வி. கார்மேகம் கட்சியின் மாநிலக் குழு சார்பிலும், காங்கிரசு தலேவர் திரு. ஜெகநாதன் பார்வர்டு பிளாக் தலேவர் திரு. முத்து சேர்வை, வலது கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் திரு. என். சி. குருநாதன், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மதுரை மாவட்டக் குழு சார்பில் தோழர் கே. வாசுதேவன், தாலுகா கட்சியின் செயலாளர் தோழர் எஸ். ராமு. தீக்கதிர் தோழர் ஐ. மாயாண்டி பாரதியும், திரு. பொன்ராஜும், தோழர் கார்மேகத்தின் அரிய பண்புகளேயும் சேவைகளேயும் பற்றி பேசினர், குடும்பத்தினருக்கு அனுதாபம் தெரிவித்து இறுதி வணக்கம் செலுத்திஞர்கள்.

அவருக்கு மனேவியும் 1வயது ஆண்குழந்தையும் இருக்கிருர்கள்.

••••••••••••••••••••••••

## தீக்கதிர்

**சந்தா விபரம்**

| | |
|---|---|
| தனிப்பிரதி | 25 காசு |
| 6 மாதச் சந்தா ரூ. | 6 00 |
| வருடச் சந்தா ரூ. | 12 00 |

# விவசாயி வர்க்கத்தை ஒன்று திரட்டிப் போராட அ. இ. விவசாய மாநாட்டின் அறைகூவல்

(3-ஆம் பக்கத் தொடர்ச்சி)

கம் ஏழ்மையில் ஆழ்ந்துவருவதில் ஆச்சரியம் எதுவும்இல்லை.

## விவசாயத் தொழிலாளர் நிலை

விவசாயத் தொழிலாளர் நிலைமைசீரகுலைந்துகொண்டே வருகிறது. அவர்களுடையகூலி மிகவும் அற்பமாகும். கூலி உயர்வுக்கான ஒவ்வொரு போராட்டமும் போலீஸ் அடக்குமுறைக்கும் நிலப்பிரபுத்துவக் குண்டர்களின் அட்டகாசங்களுக்கும் உட்படுத்தப்படுகிறது.

விவசாயக்கூலி தொழிலாளர் தேசியக் கமிஷன் கீழ்வருமாறு குறிப்பிடுகிறது:—

"சட்டத்தின் வரம்புக்குள் (குறைந்தபட்ச ஊதியச் சட்டம்) வராமல் விரிந்த அளவில் நிலங்கள் உள்ள கிராமங்கள் இன்னமும் இருக்கின்றன. சட்டம் அமுலாக்கப்படும்மாநிலங்களில் குறைந்த பட்ச ஊதியத்தை நிர்ணயித்து அமுல்படுத்தும் அமைப்பு ஒரேசீராக இல்லை. எந்த இலாகாவிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தாலும் எல்லா மாநிலங்களிலும் இது ஏட்டளவிலேயே நிற்கிறது என்பதே நம்முடைய அனுபவமாகும்."

கொடிய வறுமையில் விவசாயப் பெருங்குடி மககள் குறைந்த பட்ச தேவைக்கான உபயோகப் பொருள்களை, வாங்கமுடியாமலிருப்பதில் ஆச்சரியமெதுவுமில்லை அவர்களுடைய வாங்கும் சக்திகுறைந்து கொண்டே போகிறது

இதை இந்தியத் தொழில், வாத்தக சங்கமும் துணி உற்பத்தியாளர் சங்கமும் கூட ஒப்புக்கொண்டுள்ளன. "உபயோகிப்போர் எதிர்ப்புஏற்பட்டுள்ளது' என்று அவை கூறியுள்ளன. நூறு மில்களுககு மேல்மூடப்பட்டும்.இதனுல உற்பத்தி குறைந்த போதிலும் கூட துணியும் நூலகளும் தேங்கிக் கிடப்பதாக மில் முதலாளிகள் புகார் கூறுகின்றனர். இவ்விதமாக விவசாயி நெருக்கடி பொருளாதார நெருக்கடியைத் தீவிரப் படுத்துகிறது.

உணவு உற்பத்தியில் கடும் பற்றாக்குறை நிலைமைக்கு அடிப்படைக் காரணங்களாக இருக்கும் நம்முடைய கிராமப்புற வாழ்க்கை நிலைமைகள் இவை இந்த உறவுகள் நீடிக்கும் வரை "பசுமைப் புரட்சி" யைப் பற்றிய பேச்செல்லாம் வெறும் கானல் நீரே. இது 1968—69-ல் ரசாயன உர உபயோகம் 15 லட்சம் டன்னாக இருக்கும் என்று குறியளவு வைக்கப்பட்டிருந்தும் 8 52 லட்சம் டன்களே உண்மையில் உபயோகிக்கப்பட்டிருப்பதிலிருந்தும், 1967—68லிருந்த 9 கோடியே 56 லட்சம் டன் உணவு உற்பத்தி 9 கோடியே 40 லட்சம் டன்னாகக் குறைந்திருப்பதிலிருந்தும் வெளிப்படுகிறது.

## சார்பு நிலை

இந்தப் "பசுமைப்புரட்சி" யைப் பற்றி கூறிக்கொள்ளப்பட்டதெல்லாம் முற்றும் வெத்துவேட்டு என்பது அம்பலமாகி விட்டது. இந்திய அரசாங்கம் 1969 அக்டோர் 13ஆம்தேதி அமெரிக்காவுடன் பி. எல். 480ன் கீழ் ஒப்பந்தம் செய்து கொண்டிருப்பதின் மூலம் இது அம்பலமாகி விட்டது. இந்த ஒப்பந்தத்தின் கீழ் 30லடசம் டன் கோதுமையும் ஒரு லட்சம்பேல் பருத்தியும் 95 ஆயிரம்டன் தாவர எண்ணெயும இறக்குமதி செய்ய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இந்த ஒப்பந்தம் முந்தைய ஒப்பந்தங்களைக் காட்டிலும் கடுமையான நிபந்தனைகளுடன் கூடியதாகும். முன்பு ஐந்தில் இரண்டு பங்கு கிரயததை டாலர்களாகச் செலுத்தப்பட வேண்டும் என்று இருந்ததற்குப் பதில் இந்த ஒப்பந்தம் ஐந்தில் மூன்று பங்கை டாலர்களாகச் செலுத்தவேண்டும் என்று விதிககிறது. மேலும் இதிலிருந்து கிடைக்கும் வருமானத்தில் 9 சதவிகிதத்தை அமெரிக்கத் தூதரகம இஷ்டம போல் செலவழிக்கவும அனுமதிக்கப்படடுள்ளது முன்பு 7 சதவிகிதமே அனுமதிக்கப்பட்டிருநதது கையிருப்பு வைப்பதின பேரில் இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தும் அரசாங்கத்தின் நிதித் தேவைகளை உத்தேசித்தே பி. எல். 480 ஒப்பந்தத்தின் கீழ் கடனை அரசாங்கம் நாடியுள்ளது.

"பசுமைப் புரட்சி"யைப் பற்றிப் பெரிதாகத் தம்பட்டம் அடித்துக்கொண்டாலும் நம்முடைய குறைந்த பட்ச உணவுத் தேவைககுக் கூட அமெரிக்காவைச் சார்ந்து நிற்கும் நிலை நீடிக்கிறது. இது மட்டுமின்றி நமமுடைய சமூக அரசியல் வாழ்வை ஊழல் படுத்தும் முறையில் அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளுக்கு வசதிகளை அதிகரிக்கவும் அரசாங்கம் நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளது.

## விவசாயிகளின் போராட்டங்கள்

கொடுந் தாக்குதல்களுக்கு விவசாயிகளும், விவசாயத தொழிலாளர்களும் பணிந்து போய்விடவில்லை போலீஸ் தடியடிப் பிரயோகங்களையும், துப்பாக்கிப் பிரயோகங்களையும், நிலப்பிரபுத்துவக் குண்டர்களின் கொலைத்தாக்குதல்களையும் துச்சமாக மதித்து விவசாயப் பெருங்குடி மக்கள் மீண்டும் மீண்டும போராடினார்கள். ஆயிரக்கணக்கான பேர் சிறையில் தள்ளப்பட்டார்கள் எண்ணற்றோர் உயிர்த்தியாகம் புரிந்தார்கள். இதற்கெல்லாம் மேலாக தங்களுடைய வளர்ந்து வரும் அதிருப்தியை 1967 பொதுத் தேர்தலின் போது பல மாநிலங்களில் காங்கிரஸ் கட்சியைத் தோற்கடித்ததின் மூலம் புலப்படுத்தினார்கள்.

மேற்கு வங்கத்திலும், கேரளத்திலும், ஐ. மு. அரசாங்கங்கள் ஏற்பட்டதானது. இந்த மாநிலங்களில் இந்த மக்கள் நடத்துய போராட்டங்களுக்கு உத்வேகம்அளித்துமுன்னேறிச் செல்ல உதவியது.

என்ருலும் மேற்கு வங்கத்தையும், கேரளத்தையும் தமிழ் நாட்டில் சில திட்டுகளையும் தவிர நாட்டின் பெரும் பகுதிகளில் இந்தப் போராட்டங்கள் வீறுகொண்டெழவில்லை என்பதையும் நாம் பார்க்க வேண்டும்.

ஸ்தாபனத்தில் இந்த அடிப்படைப் பலவீனத்தைப் போக்கிக் கொள்வதற்கு பெரும வாய்ப்புகள் இருக்கின்றன. விவசாயத்தொழிலாளர்களையும் ஏழை விவசாயிகளையும் சார்ந்து கொண்டு விவசாயிகள் சங்கம் கீழ்வரும் கோரிக்கைகள் மீது போராட்டங்களை நடத்த வேண்டும்.

## கோரிக்கைகள்

தீவிர விவசாய சீர்திருத்தம் விவசாயத் தொழிலாளர்களுக்கும், ஏழை விவசாயிகளுக்கும் உபரி தரிசு நில விநியோகம், நிலவெளியேற்றங்களை உடனே நிறுத்துதல், வீட்டுமனை உரிமைகளை வழங்கல் ஆகியவற்றை மேற்கொள்ள வேண்டும்.

கடன்களை நிறுத்திவைத்தல், பழைய கடன்களைக குறைத்தல் ரத்து செய்தல், விவசாயத் தொழிலாளர்களுக்கும், ஏழை விவசாயிகளுக்கும் கடன் வசதி அளித்தல் ஆகியவற்றை செய்ய வேண்டும்.

விவசாயிகளின் உற்பத்திப் பொருள்களுக்குக் குறைந்த பட்ச கட்டுபடியாகும் விலை, இதற்குக் குறைவாக மார்க்கெட் விலை விழுந்தால் அரசாங்கம் தலையிட்டு விவசாயிகளிடமிருந்து குறைந்த பட்ச விலையில் உற்பத்திப் பொருள்களை வாங்குதல், அரசாங்க உணவுதானிய வியாபாரம் ஆகியவற்றை மேற்கொள்ளுதல் வேண்டும்.

ஏழை விவசாயிகளுக்கு வரி நிவாரணம் அளிக்கவேண்டும்.

விவசாயத் தொழிலாளர்களுக்கு நியாயமான விலை உத்திரவாதமும், நியாயமான வேலை நிலைமைகளும் அளிக்க வேண்டும. இதை அமுல்படுத்துவதற்கான முறையான அரசு அமைப்பும் ஏற்படுத்த வேண்டும்.

இத்தக் கோரிக்கைகளை அடைவதற்கான போராட்டம் விவசாயிகள். விவசாயத் தொழிலாளர்களின் போராட்டம் மட்டுமல்ல. நாடு முழுதின் வறுமையைத் துடைப்பதற்கான போராட்டம். நாட்டின் மறுமலர்ச்சிக்கான போராட்டம் ஏனெனில் கிராமப் புறங்களில் வாழும் கோடானு கோடி மக்கள் வறுமைச் சேற்றிலும் கடன் சுமையிலும் ஆழ்ந்திருக்கும் வரை நம்முடைய பொருளாதார சார்பு நிலைக்கு முடிவு ஏற்படாது. விவசாய மறுமலர்ச்சி ஏற்படாது, தொழில் முன்னேற்றம் ஏற்படாது.

பொருளாதார நெருக்கடி முற்றி வரும் நிலையில் விவசாயிகளின், விவசாயத் தொழிலாளர்களின் நிலைமைகள் மோசமாகிவரும் நிலையில் இந்தக் காலகட்டம் மகத்தான போராட்டங்கள் நிறைந்த காலகட்டமாக இருக்கும். தங்களுடைய உரிமைகளை விவசாயிகளும் விவசாயத் தொழிலாளர்களும் உணர்ந்து வருகிருர்கள். நிலத்துக்காவும், நிலவெளியேற்றத்தை எதிர்த்தும், ஊதிய உயர்வுக்காகவும், எல்லாவித அடக்கு முறைகளையும் எதிர்த்தும் இந்தக் காலகட்டததில் போராட்டங்கள் வெடித்தே தீரும்.

விவசாயிகளும், விவசாயத் தொழிலாளாகளும் முன்னேறிச் செல்லும் இந்தக் காலகட்டத்தில் அகில இந்திய விவசாயிகள்சங்கத்தின இந்த20—வது மாநாடு தன்னுடைய பொறுப்புகளை உணருகிறது. விவசாயிகள் சங்கத்தின் அறைகூவலை ஒவ்வொரு கிராமத்துக்கும் கொண்டு செல்லுமாறு தன்னுடைய எல்லா கிளைகளையும், தொழிலாளர்களையும் அகில இந்திய விவசாயிகள் சங்கம் வேண்டுகிறது. இந்தப் போராட்டங்களுக்குத் தலைமை தாங்கி அதற்குச் சரியான உருவம் கொடுக்கும முறையில் விவசாயிகளையும் விவசாயத் தொழிலாளர்களையும் ஒன்று திரட்டுமாறு அது வேண்டுகோள் விடுகிறது.

---

## வாக்காளர்பட்டியல் புதுப்பித்தல்

—★—

### தேர்தல் அதிகாரி அறிக்கை

பின்வரும் அறிக்கையினைத்தமிழகதேர்தல்அதிகாரி வெளியிட்டுள்ளார்:—

மாநிலத்திலுள்ள சட்டமன்ற தொகுதிகளின் வாக்காளர்பட்டியலை 1-1-1970 முதல் அமுலுக்கு வரும் முறையில் உடனடியாகத் திருத்ததேர்தல் கமிஷன் உத்திரவிட்டுள்ளது. அதற்கிணங்கஇம்மாநிலத்திலுள்ள234 சட்டமன்றத் தொகுதிகளின் வாக்காளர்பட்டியல்கள் திருத்தப்படுகிறது. தற்போது அமுலிலுள்ள பட்டியல் நகல்களாக 15-11-69-ஆம் நாளன்று வெளியிடப்படுகிறது.

தற்போது மேற்கொள்ளப்படும் வாக்காளர்பட்டியல் திருத்தம் தீவிரத்தன்மை கொண்டதாய் இருக்கும். திருத்துபவர்கள் தற்போதய பட்டியலை வீடுவீடாக சென்று திருத்துவர்கள். திருத்தும் வேலை 15-11-69-ஆம் தேதி ஆரம்பமாகி 7-12-69-ஆம் தேதி முடிவடையும் தற்போது திருததப்படும் பட்டியல் எதிர்கால தேர்தலுக்குப் பயன்படுத்தப்படும். முடிந்த அளவுக்கு பட்டியலை சரியானதாக தயாரிக்க அதிகாரிகள் எல்லா முயற்சிகளையும் செய்வார்கள் அரசியல்கட்சிகள் உண்மையான சிரத்தையெடுத்து பட்டியல் தயாரிக்கும் வேலையின்போது அதிகாரிகளுடன் ஒத்துழைத்தால், ஒவ்வொரு வாக்காளரையும் தனது பெயரை பட்டியலில் சேர்க்க உற்சாகமூட்டினுல் இவ்வேலை மிகவும் எளிதாக முடியும் எனவே சென்னை நகர தொகுதிகளுக்கான வாக்காளர்பட்டியலுக்கான சேர்த்தல், நீக்குதல்,திருததப்பட்டியல்களை சென்னை கார்பொரேஷன் ஆணையருக்கும், இதர மாவட்டங்களில் சம்பந்தப்பட்ட வாக்காளர் பதிவு அதிகாரிக்கும் நேரிடையாக அனுப்பிவைக்க கேட்டுக்கொள்கிறேன். இவ்விதபட்டியல்கள் 30-11-69-ஆம் தேதிக்குள் அனுப்பிவைக்கப்படவேண்டும்.

---

## போனஸ் வெற்றிகள்

மதுரை ஜெனரல் ஓர்க்கர்ஸ் யூனியன்தலையிட்டுக் கீழ்க்காணும்இடங்களில்போனஸ்வெற்றிகள் கிடைத்தன. கருணாநிதி பிரிண்டர்ஸில் இரண்டரை மாத போனசும், வெக்ஸ்மென் போட்டோ மவுண்ட் கம்பெனியிலும் இந்திய-இலங்கை ஹோட்டலிலும் இரண்டே கால்மாத போனசும், லலிதா பிரிண்டர்ஸிலும், விநாயகர் பிரஸிலும் இரண்டுமாதபோனசும், எம் வி. எஸ். பிரண்டர்ஸிலும் ஜோதி பிரஸிலும் ஒன்றரைமாத போனசும், முருகன் அச்சகத்தில் ஒருமாத சம்பளத்துடன் ரூபாய் பதினைந்தும், அலங்காநல்லூர் ஸ்ரீ முனியாண்டிவிலாஸ் பிரியாணி—சாப்பாடு ஹோட்டலிலும், மதுரை மொசைக் இண்டஸ்ரீஸிலும் ஒருமாத போனசும் திருமங்கலம் மெட்டல் பவுடர் கம்பெனியில் பதினைந்து சதவிகிதபோனசும், பாண்டியன் பிரஸில் பத்தரை சதவிகித போனசும், தேனி அருள் ஜின்னிங் பாக்டரியில் ஆண்களுக்கு ரூபாய் அறுபத்தி இரண்டும், பெண்களுக்கு ரூபாய் முப்பத்தைந்தும், தேனி கே. டி. கே. ஜின்னிங் பாக்டரியில் ஆண்களுக்கு ரூபாய் எழுபத்தொன்றும், எழுபத்தைந்து புதுகாசும் பெண்ளுக்கு ரூபாய் நாற்பத்தி நான்கும், ஐம்பது புதுக்காசுவும் போனசாக பெற்றனர்.

## வாக்காளர்பட்டியல் புதுப்பிக்கும் வேலை

—★—

### கட்சிக்கமிட்டிகள், கிளைகள், தோழர்களின் உடனடிக் கவனத்திற்கு

**தோழர்களே!**

தேர்தல்கமிஷன் உத்தரவின்படி,இம்மாநிலத் தேர்தல் அதிகாரிகளும் வாக்காளர் பட்டியலை புதுப்பிக்கும் இயக்கத்தைத் துவக்கியுள்ளனர். இப்பொழுது அறிவிக்கப்பட்ட தேதிவரை வயது வந்தோர் அனைவரையும் பட்டியலில் சேர்க்கும் இயக்கம் இது.

ஏற்கனவேயிருந்த பட்டியலிலேயே தகுதியுள்ள பல வாக்காளர்கள் வேண்டுமென்றே விடப்பட்டிருந்தனர் என்ற விஷயம் தேர்தல் நடந்தபோதுதான் தெரிய வந்தது.

சில அதிகாரிகளைக் கைக்குள்போட்டுக்கொண்டு தங்களுக்குப் பாதகமாக வாக்களிக்கக்கூடும் என்று கருதப்பட்டவர்களை மாற்றுக்கட்சிகளைச் சேர்ந்த செல்வாக்குப் படைத்தவர்கள், வாக்காளர்பட்டியலில் சேர்க்காமலும் சேர்க்கப்பட்டிருந்தவர்களை அகற்றியும் சதிவேலைகள் புரிந்துள்ளனர்.

வயது வந்தோருக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டிருப்பதாக பறைசாற்றிவிட்டு, அதே சமயத்தில் தமக்குவேண்டாதவர்களுக்கு வாக்குரிமையை மறுக்கும் சதிவேலை இது என்பதை அரசியல் விழிப்புள்ள அனைவரும் உணரவேண்டும்.

எனவே, இன்று நடைபெற இருக்கும் வாக்காளர்பட்டியல் புதுப்பிக்கும் இயக்கத்தில் நம்கட்சிக் கமிட்டிகளும், கிளைகளும், தோழர்களும் உரியகவனம் செலுத்துவது மிக மிக அவசியம்.

சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கூட்டும் கூட்டங்களில் கலந்துகொள்வதுடன், நமக்குத்தொடர்புள்ள சகலபகுதியினரும் வாக்காளர்பட்டியலில் இருக்கிறார்களா என்பதையும், இல்லாவிட்டால்புதிதாகச் சேர்க்கப்படுவதற்கும் உடனடிக் கவனம் செலுத்தும்படி கட்சிக்கமிட்டிகளையும், கிளைகளையும், தோழர்களையும் வேண்டுகிறோம்.

**13, முதல் சந்து**
**வடக்குச்சித்திரை வீதி,**
**மதுரை-1.**

தோழமையுள்ள
செயற்குழு,
**இந்தியக்கம்யூனிஸ்ட்கட்சி**
**(மார்க்சிஸ்ட்)**
**தமிழ் மாநிலக்கமிட்டி**

# பெரியகுளம், உத்தமபாளையம் தாலுகாவில் நமது தலைவர்கள்

## கொள்கை விளக்கப் பிரச்சாரக் கூட்டங்கள்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்மாநிலக்குழுக் கூட்டம் நவம்பர் 10 முதல் 13 வரை பெரியகுளம் நகரில் நடைபெற்றது. அதையொட்டி பெரியகுளம் உத்தமபாளையம் தாலுகாக்களில் கொள்கை விளக்கப் பொதுக் கூட்டங்கள் நடந்தன.

ஜெயமங்கலம், நிலக்கோட்டைத்தாலுகா வத்தலக்குண்டு, உத்தமபாளையம், பெரியகுளம், போடி, ஜக்கம்பட்டி கண்டமனூர், கங்குவார்பட்டி, கோம்பை, க. புதுப்பட்டி, கூடலூர், காமயக்கவுண்டன்பட்டி, சுருளிப்பட்டி, லெட்சுமிபுரம், பூதிப்புரம், கம்பம், சிப்பாலக்கோட்டை, ஏத்தக்கோயில், தேவதானப்பட்டி ஆகிய ஊர்களில் சிறப்பான பொதுக்கூட்டங்கள் நடந்தன.

பொதுக் கூட்டங்களில் தோழர்கள். பி. ராமமூர்த்தி. ஆர். ராமராஜ். ஏ. பாலசுப்ரமணியம், ஆர். உமாநாத், கே முத்தையா, என். சங்கரய்யா, வி. பி. சிந்தன், தென்னற்காடு எஸ் நடராஜன், திண்டுக்கல் என். வரதராஜன், எஸ் ஏ. தங்கராஜ், சென்னை பி. ஆர் பரமேஸ்வரன்,நெல்லை எஸ். பாலவிநாயகம் ஆகியோர் பேசினார்கள்.

மற்றும் பெரியகுளம் தாலுகா கம்யூனிஸ்ட் தலைவர்களான தோழர்கள். அப்துல் வஹாப், உசேன்மீர், என். ராமச்சந்திரன், வி. சொக்கலிங்கம், பி. சி முத்துச்சாமி, ராஜப்பன், ஆர். சுப்பையா, ஹனிபா, அகமதுசுல்தான், மதுரை எஸ். மன்னார்சாமி, எம். வீரபத்திரன், நாச்சிவேல் வெள்ளைச்சாமி ஆகியோரும் பேசினார்கள்.

உத்தமபாளையம், க. புதுப்பட்டி, பூதிப்புரம் ஆகிய ஊர்களில் பாவலர் வரதராஜன் கச்சேரியும் நடைபெற்றது.

குறிப்பாக தோழர் பி. ராமமூர்த்தி பெரியகுளம், போடி, கம்பம் ஆகிய ஊர்களில் பேசினார்.

எல்லாக் கூட்டங்களிலும் கேரளத்தில் வலதுசாரிகள் செய்யும் துரோகத்தைப் பற்றியும் மேற்கு வங்கத்தில் ஐ. மு அரசைக் கவிழ்க்க வலது கம்யூனிஸ்டுகளும் பங்களா காங்கிரசும் புரிந்துவரும் சதிவேலைகள் பற்றியும் தமிழகத்தில் தி. மு. க. அரசு காங்கிரஸ் சின்டிகேட்விரோதக்கொள்கை களை அமுல்நடத்தி வருவதை கைவிடக் கோரியும், மத்திய காங்கிரசில் ஏற்பட்டுள்ள நெருக்கடியில் நமது நிலைபற்றியும் தலைவர்கள் விளக்கிக் கூறினார்கள். கட்சி வளர்ச்சி நிதிக்கு பண முடிப்புகளும் அளிக்கப்பட்டன.

## செவ்வானம் நாடகம்

மதுரையில் செங்கதிர் கலைக் குழுவினரால் தோழர் பி. ஆர் மணிவிழாவின்போது நடிக்கப்பெற்ற "செவ்வானம்" நாடகத்தை பல தோழர்கள் தாங்கள்நடத்த விரும்புவதாகவும், ஆகவே இதன் பிரதி அனுப்பி வைக்க வேண்டுமென்றும் எழுதியுள்ளார்கள்.

இந்நாடகம் இன்னும் அச்சடிக்கப்படவில்லை. கைப்பிரதி எடுத்து அனுப்ப இயலாத நிலையிலிருக்கிறோம் என்பதை சம்பந்தப்பட்ட தோழர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறோம்.

**செங்கதிர் கலைக் குழு**
**மதுரை.**

## ஞாயிற்றுக்கிழமை விடுமுறை கேட்டனர் மேலூர் தொழிலாளர்

—★—

### அவர்கள்மீது தி. மு. க. சங்கத்தினர் தாக்குதல் தொடுத்தனர்

மதுரை மாவட்டம் மேலூர் நகரில் உள்ள கூட்டுறவு நூற்பாலையில் சுமார் 450 தொழிலாளர்கள் வேலை பார்க்கிறார்கள்.

கடந்த 3 மாத காலமாக பொதுவிடுமுறை நாளான ஞாயிற்றுக் கிழமையிலும் "ஜென்ரல் ஷிப்டை" ஓட்ட முனைந்திருக்கிறார்கள்.

இதற்கு தி மு. க சங்கமும் ஐ. என். டி. யு சி சங்கமும் உடந்தை. மதுரை பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் இதற்குச் சம்மதிக்க வில்லை. ஞாயிற்றுக் கிழமையில் விடுமுறை விட வேண்டுமென கிளர்ச்சி செய்தது. சென்றமாதம் மதுரைக்கு வந்த அமைச்சர் மாதவன், விசாலாட்சி மில்லிலும், மேலூர்மில்லிலும ஞாயிற்றுக் கிழமையிலும் ஜென்ரல் ஷிப்ட் ஓட்ட வேண்டுமென்று தி. மு. க. ஊழியர்களிடம் கூறிச் சென்றிருக்கிறார். பஞ்சாலை சங்கமோ ஞாயிறு விடுமுறை வேண்டும் என்று கூறுகிறது.

அத்துடன், மட்டரகமான பஞ்சைக்கொண்டுநூற்பதால், தரமான நூல் உற்பத்தியாவதில்லையென்றும், பொதுச் சொத்து வீணாவதாகவும்மேலதிகாரிகளுக்கு பஞ்சாலைசங்கம் தெரிவித்தது. இது மில் நிர்வாகத்துக்கு ஆத்திரத்தை உண்டு பண்ணிவிட்டது.

### தாக்குதல்

தி. மு க. சங்கத்தலைவர்கள் "வலது கம்யூனிஸ்டுகளை ஒழித்துக்கட்டப்போவதாக ஷிப்டு கூட்டங்களில் பேசினார்கள்; கண்ணியமற்ற முறையில் பஞ்சாலை சங்கத் தலைவர்களைக் கேவலமாகத் திட்டினார்கள்.

9—11—69 மாலை 6 மணிக்கு 50 பேர்களைத் திரட்டிக்கொண்டுகம்யூனிஸ்ட் கட்சி அலுவலகத்தைத் தாக்கினார்கள்; அங்கிருந்தவர்களை வெட்டிவிடுவதாக மிரட்டினார்கள்.

### போலீஸ் மவுனம்

போலீஸில் புகார் செய்தும் எவ்வித உடனடி நடவடிக்கையும் எடுக்கவில்லை.

அதன் பேரில் மேலூர் தாலுகா கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) செயலாளர் தோழர் கி. ராமசாமியும் முஸ்தபாவும் தி. மு. க. பிரமுகர் வே. அரசு, சக்கம்பட்டி ஊராட்சி மன்றத் தலைவர் சந்திரசேகரன், சர்க்கிள் இன்ஸ்பெக்டர் ஆகியோரும் இருந்து 10-11-69-ல் மாலை 3 மணிக்கு இப் பிரச்னையைப் பேசித் தீர்க்க முடிவு செய்தனர்.

### தொடர்ந்து தாக்குதல்

ஆனால் நடந்தது என்ன? 10-தேதி மாலை 3 மணிக்கு வேலைக்குச் சென்ற சங்கச் செயலாளர் ஜனார்த்தன் உதவிச் செயலாளர் சுந்தரம் முதலியார் நிர்வாகக் குழு உறுப்பினர் பெருமாள், மற்றும் செந்தூர்க்காளை, பொன்னையா, கடற்கரை ஆகிய 6 பேர்களையும் தாக்கினார்கள்.

போலீஸில் புகார் கொடுக்கப்பட்டது. ஆனால் போலீஸ் நடவடிக்கை ஏதுமில்லை. பகல் ஷிப்ட் தொழிலாளர்களும் தாக்கப்பட்டனர் அதற்கும் போலீஸ் நடவடிக்கை இல்லை. தோழர் கே. பி. ஜானகி அம்மாள் எம். எல். ஏ., மில்லின் சேர்மன் கு. திருப்பதி அவர்களிடம் தக்க நடவடிக்கை எடுக்கும்படி கோரினார்; மாவட்டபோலீஸ் அதிகாரிக்கும் தெரிவித்தார்.

இவ்வளவுக்கும் பிறகும்மேற்கொண்டும் 6 தோழர்களை தாக்கியிருக்கிறார்கள்.

என்ன செய்தாலும், தொழிலாளி வர்க்க உரிமையான "ஞாயிற்றுக்கிழமை முழு விடுமுறை வேண்டும்" என்ற உறுதியில் தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்து வருகிறார்கள்.

———

## காங்கிரசைப் பாதுகாக்க வலது கம்யூனிஸ்டு அர்த்தால்

வலது கம்யூனிஸ்டுகளுக்கு, காங்கிரசை உடையாமல் பாதுகாப்பதில் மிகுந்த அக்கறை உண்டு. எக்ஸ்பிரஸ், இந்து, தினமணி, மித்திரன் ஆகிய ஏகபோக முதலாளித்துவ ஏடுகளுக்கு எவ்வளவு ஆழ்ந்த அக்கறை உண்டோ அந்த அளவு அக்கறை வலது கம்யூனிஸ்டுகளுக்கும் உண்டு என்பதை வடசென்னையில் நடந்த அர்த்தால் முயற்சியின் மூலம் வெளிப்படுத்தினர்.

வலது கம்யூனிஸ்டு ஏ. எஸ். கே. அய்யங்கார், இந்திரா ஆதரவு காங்கிரஸ்காரர்கள் ஒன்று சேர்ந்து, இந்திரா காந்தியை காங்கிரசிலிருந்து வெளியேற்றியதற்காக சிண்டிகேட்டைக் கண்டித்து அர்த்தால் நடத்தினராம். அர்த்தால் வெற்றியா அல்லது தோல்வியா எனும் ஆராய்ச்சி நமக்குத் தேவையில்லை. ஆனால் இதன்மூலம் தங்களது நீண்டகால காங்கிரசு ஆதரவை—பக்தியை வெளிப்படுத்தியுள்ளனர் என்பது முக்கியமானது.

சிண்டிகேட், இந்திராவை வெளியேற்றியதைக் கண்டிக்கிறார்கள் வலதுசாரிகள். அப்படியானால் சிண்டிகேட் பராமரிப்பிலேயே இந்திரா இருக்கவேண்டும் என்று கோருகிறார்களா?

காங்கிரஸ் ஒன்றுபட்டிருக்கவேண்டும் என்பதில் இவர்களுக்கு இவ்வளவு ஆழ்ந்த அக்கறை ஏன்? இந்திரா ஆதரவுக் காங்கிரஸ்காரர்கள் கோபம் அடைவதில், ஆத்திரம் அடைவதில் அர்த்தமுண்டு. இவர்களுக்குக் கோபம் வருவதற்குக் காரணமென்ன? சிகப்புச் சட்டை அணிந்த காங்கிரஸ்காரர்களே இந்த ஏ. எஸ். கேயும் பாலதண்டாயுதமும் என்பதை நிலை நாட்டிக்கொண்டார்கள். 'சந்தர்ப்பவாத ஒற்றுமை கூடாது' என்று டாங்கே அறிக்கை விடுகிறார் ஒருபுறம். 'காங்கிரசை விட்டு இந்திராவை வெளியேற்றாதே' என்று கோருகிறார்கள் தமிழ்நாட்டு வலதுசாரிகள். இதற்கு அர்த்தால் வேறு! அடமானங்கெட்ட வலதுசாரியே! உனக்கு ஏதாவது கொள்கை உண்டா?

23-11-69 தொலைபேசி: 7395 Theekkathir பதிவு எண்: 7747

# கண்ணோட்டம்

## "கணவனுக்கு அடங்காத மனைவியும்" முதலமைச்சர் கருணாநிதியும்

**சென்னை** வண்ணையம்பதி பொதுக்கூட்டம் ஒன்றில் முதலமைச்சர் கருணாநிதி பேசியதாக தினத்தந்தி கீழ்வரும் செய்தி வெளியிட்டு உள்ளது:—

"இடதுசாரிக் கம்யூனிஸ்ட்கட்சி அங்கம் வகிக்கும் மேற்கு வங்கத்தில் சட்டம் ஒழுங்கு கெட்டுவிட்டது என்று வங்க முதலமைச்சர் அஜாய்முகர்ஜி அறிவித்திருக்கிறார். நிலைமை இவ்வாறிருக்க இடதுசாரிக் கம்யூனிஸ்ட தலைவர் ராமமூர்த்தி, காங்கிரசாட்சியும் தி. மு. க. ஆட்சியும் ஒன்றுபோல் பேசி இருக்கிறார்.

**கணவனுக்கு அடங்காத மனைவியைப்போல** மேற்குவங்காளத்தில் நடந்துகொள்ளும் உதவி முதல்மந்திரி ஜோதிபாசு பக்கம் ராமமூர்த்தி திரும்பி உபதேசம் செய்யட்டும்."

இது முதலமைச்சர் கருணாநிதி பேசியதாக 19-11-69 மதுரை தினத்தந்தியில் வந்த செய்தியாகும்.

"**கணவனுக்கு அடங்காத மனைவிபோல்**" என்ற உதாரணத்தை கருணாநிதி தருவதன்மூலம் குடும்ப உறவு முறையைப் பற்றிய அவருடைய சமுதாயப் பார்வை எப்படியிருக்கும் என்பது தெளிவாகிறது. '**கணவனுக்கு மனைவி அடங்கியவள்**' என்பது அவருடைய பார்வை! நீண்ட நெடுங்காலத் திய—நிலப்பிரபுத்துவ—முதலாளித்துவ—அடிமை முறை குடும்பவாழ்க்கையை ஆமோதிக்கும் பாணியில் உவமைகூறி கருணாநிதி பேசியுள்ளார்.

எனவே அவரது ஆண்—பெண் உறவுபற்றிய "நவீனப்' பார்வை!

'**கணவனுக்கு மனைவி அடங்கியவள்**' என்ற பத்தாம் பசலிச் சித்தாந்தத்திற்கு விரோதிகள் மார்க்சிஸ்டுகள். "ஆணோடு பெண்ணும சரிநிகர் சமானமாக" வாழவேண்டும் என்னும் வாழ்க்கை நெறி முறையைக் கொண்டவர்கள் மார்க்சிஸ்டுகள்.

மேற்கு வங்க அமைச்சர்களிடையே நிலவும் உறவு சமத்துவ உறவாகும். திருவாளர் கருணாநிதிக்கும் அவரது சக தி. மு. க அமைச்சர்களுக்கும் இடையே நிலவும் உறவு அவர் கூறும் "கணவனுக்கு அடங்கிய மனைவி" போன்ற உறவாக இருக்கலாம். அது கருணாநிதிக்கு விருப்பமான உறவுமுறையாக இருக்கலாம்! அதைப்பற்றி எங்களுக்குக் கவலை இல்லை.

ஆனால், மே. வங்க அமைச்சர்களிடையே நிலவும் உறவு பற்றி தன்னுடைய பத்தாம்பசலிப் பார்வையைப் புகுத்த முயற்சி செய்திருப்பதால் தான் திரு. கருணாநிதிக்கு ஐ. மு. கட்சிகளிடையே நிலவும் உறவு என்னஎன்பது பற்றி எடுத்துக் கூறவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது.

14 அரசியல் கட்சிகள் சேர்ந்த ஐ. மு. அரசு மே. வங்க அரசு. இதில் ஒவ்வொருகட்சியும் விருப்பப்பூர்வமாகவே இணைந்துள்ளது. அவைகளிடையே நிலவும் உறவு ள் சமத்துவ உறவுகள். அஜாய்முகர்ஜியின் விருப்பத்தின்பேரில் அல்ல தோழர் ஜோதிபாசு அங்கு உதவி முதலமைச்சராக இருப்பது. அஜாய் முகர்ஜிக்கு முதலமைச்சர் பதவி கிடைத்ததே ஏனைய எல்லாக் கட்சி ளும் ஒப்புக்கொண்டதின் காரணமாக! இன்னும் கூறப்போனால் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி விட்டுக் கொடுத்ததினால்தான! 14 கட்சிகளும் சேர்ந்துதான் 'யாருக்கு எந்தப் பொறுப்பு" என்பதை நிர்ணயித்து அங்கு ஆட்சி புரிகின்றன. திரு. கருணாநிதிக்கு வாய்த்துள்ளதுபோல் மேற்கு வங்கத்தில் அஜாய்முகர்ஜிக்கு ஏகபோக ஆதிக்க அந்தஸ்து என்பது கிடையாது.

எனவே அஜாய்முகர்ஜிக்கு கருணாநிதியின் வாழ்க்கைச் சித்தாந்தத்தின் வழி "கணவன்" அந்தஸ்து என்பது அங்கு இல்லை. அவருக்கு அடங்கிநடக்கவேண்டிய அவசியமும் இல்லை.

கூட்டாக ஐக்கியமுன்னணிகூடி ஒவ்வொரு அமைச்சருக்கும் என்ன கொள்கைத்திட்டம் வகுக்கிறதோ, அக்கொள்கைத்திட்டத்தின் வழியிலேயே அமைச்சர்கள் செயல்படுகிறார்கள்.

இத்தகைய கூட்டு முடிவுக்கும், கொள்கைக்கும் விரோதமாகவே இன்று அஜாய்முகர்ஜி பகிரங்கமாக இயக்கம் நடத்த முன்வந்துள்ளார். இவ்வாறு செய்வது தவறு என்று ஐ. முன்னணி அவருக்கு எடுத்துக்கூறியது. என்னும் அவர் எதேச்சதிகாரப்பாதையில் செல்வதை அவர் நிறுத்திக்கொள்ளவில்லை, அதன் பலனை அவர் சீக்கிரமே அனுபவிப்பார் [illegible]பதில் எமக்குச் சந்தேகமே இல்லை.

மே. வங்கத்தில் 'சட்டமும் அமைதியும்' கெ[illegible]ட்டது என்று கூக்குரல் போடுபவர்கள் ஐ. மு எதிரிகள[illegible] சிண்டிகேட், ஜனசங்கம், சுதந்திரா ஆசாமிகள். இந்தக் [illegible]னியாருடன் திரு. கருணாநிதியாரும் சேர்ந்துகொண்டது [illegible] வியப்பாக உள்ளது.

திரு. கருணாநிதியின் ஆட்சி சட்டத்திற்கும் ஒழுங்கிற்கும் பெயர்போன ஆட்சி என்று முதலாளிகளிடத்திலும் நிலச்சுவான்தார்களிடத்திலும் செல்வாக்குபெற்று வருகிறது. இதைக்கண்டு அவர் பூரிப்படையட்டும். ஆனால் அந்தப் பூரிப்பில் பங்குகொள்ள நாம் தயாராக இல்லை. முதலாளிகள் நிலச்சுவான்தார்களின் அட்டகாசங்களுக்கு தி. மு. க. ஆட்சி ஊக்கமளிக்கிறது என்று புள்ளிவிவரங்களுடன் கோவைத் தொழிலாளர் மாநாட்டிலும், திண்டுக்கல்லில் நடைபெற்ற விவசாயிகள் மாநாட்டிலும் விபரமாக எடுத்துக் கூறியிருக்கிறோம். அதற்குப் பதில்கூற முடியாத காரணத்தினாலேயே சிண்டிகேட் கம்பெனியார் பேசும்பாணியில் "வங்கத்தைப்பார்" என்று வேரிடத்தை நோக்கி விரலைச்சுட்டுகிறார்!

திட்டவட்டமான விமர்சனம் கூறினால் அதற்குப் பதில் கூறாமல் "அவை காங்கிரசாட்சியில் நடக்கவில்லையா?" "வங்கததில் நடக்கவில்லையா?" "கேரளத்தில் நடக்கவில்லையா?" என்று பதில் கேள்விகள் கேட்பது பலன் தராது. தனக்கு நேர் எழும் பிரச்சினைகளைப் புறக்கணிக்கும் போக்கு அது.

—மார்க்சிஸ்ட்.

# ஐந்து லட்சம் அரசு ஊழியர்களின் கிளர்ச்சி

அதிக அளவு எண்ணிக்கையில் கூட்டாக நின்று போராடினால்தான் கோரிக்கைகளைச் சக்தியாக வலியுறுத்திப்பெற முடியுமென்று தமிழக என். ஜி ஓ. சங்கமும், தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணியும் பற்றும் 4 சங்கங்களும் ஒன்று சேர்ந்து போராட்டக்குழு அமைத்துள்ளன. இந்த 6 அமைப்புகளின் உறுப்பினர் எண்ணிக்கை 5 லட்சம் என்று கூறப்படுகிறது.

1. என் ஜி. ஓ. சங்கம்.
2. தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணி.
3. பஞ்சாயத்து யூனியன் அலுவலர்கள் சங்கம்.
4. கடைநிலை ஊழியர்கள் சங்கம்.
5. சரக ஜீப் டிரைவர்கள் சங்கம்.
6. சுருக்கெழுத்து, டைப்பிஸ்டுகள் சங்கம்.

ஆகிய 6 சங்கங்களின் சார்பாளர்கள், இவைகளை இணைத்து ஒருங்கிணைப்புக்குழு அமைத்துள்ளனர். இதன் சார்பாக 1970-இல் ஒரு மாநில மாநாடு நடத்தப் போவதாகவும், இடைக்கால நிவாரணம் ரூ. 30ஐ வருகிற டிசம்பர் 15-ஆம் நாளைக்குள் தராவிட்டால் ஊர்வலங்களும் ஆர்ப்பாட்டங்களும் நடத்தப்படுமென்றும் என்.ஜி.ஓ.சங்க கோரிக்கையை அரசு ஏற்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

நவம்பர் 18 இல் மதுரையில் கூடிய தமிழக அரசு அலுவலர்கள் செயல் முறைக் குழுக் கூட்டத்தில் மேற்கண்ட முடிவுகள் எடுக்கப்பட்டதாக, அக்கூட்டத்துக்கு தலைமை வகித்த திரு சிவ. இளங்கோ தெரிவித்தார்.

## தூத்துக்குடியில்

### மாணவர் சங்க அமைப்பு

தூத்துகுடியில் அக் 25ஆம் நாள் மாணவர் சங்க பேரவை கூடியது. அரசினர் பாலிடெக்னிக் வ. உ. சி. கல்லூரியைச் சேர்ந்த 30 மாணவர்கள் கலந்து கொண்டனர். அப்போது தமிழக மாணவர் சங்கக் கிளைக்கு தோழர்கள் நெக்சோ மார்டின் தலைவராகவும் எஸ். முத்துப்பாண்டி செயலாளராகவும் எஸ். செல்வராஜ் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்

## பரமக்குடியில்

### மாணவர் சங்கத் துவக்க விழா

முகவை மாவட்டம் பரமக்குடியில் தமிழக மாணவர் சங்கத்தின் துவக்கவிழா பொதுக் கூட்டம் 16—11—69 மாலை 7 மணிக்கு முத்தாலம்மன் கோவில் திடலில் நடைபெற்றது. கூட்டத்திற்கு மாணவர் திரு. உ. இராமையா தலைமை வகித்தார். கூட்டத்தில் புலவர் திரு. த. ச இராசாமணி ஆசிரியர் திரு. எம். நடேசன் மாணவர் சங்க உதவிப் பொதுச் செயலாளர் திரு. இரா நாராயணன் ஆகியோர் மாணவர் சங்கத்தின் நோக்கங்களையும், அதன் செயல் முறையையும் விளக்கிப்பேசினர். "இன்றைய கல்வி முறையை முற்றிலும் மாற்றி விஞ்ஞான அடிப்படையில் அமைந்த கல்வி முறையை உருவாக்க வேண்டும்; காலத்திற்கேற்ற கல்வி முறை வேண்டும்" என்று வலியுறுத்தினர்.

### பட்டி மன்றம்

பின்பு "சமுதாய ஏற்றத் தாழ்வுகளைக் களைய வள்ளுவம் வழி காட்டியதா?" என்னும் பொருளில் பட்டிமன்றம் நடைபெற்றது. புலவர் திரு. இராசாமணி நடுவராகவும், 'வழி காட்டியது' என்ற குழுவில் திருவாளர்கள் பரம்பை அறிவன், பரம்பை சுதி, அறவாழி ஆகியவர்களும், 'வழி காட்டவில்லை' என்ற குழுவில் திருவாளர்கள் கா. தேவராசக்கனி, எம். நடேசன் ஆகியோர்களும் மிகச் சிறப்பாகச் சொற்பொழிவாற்றினர். 300க்கும் மேற்பட்ட பொது மக்களும் மாணவர்களும் திரளாக வந்திருந்தனர். இறுதியில் மாணவர் திரு. ஏ. சுப்பிரமணியம் நன்றி கூற கூட்டம் இனிது முடிந்தது.



தீக்கதிர் அச்சகம் (13 முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை – 1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர்: கே. முத்தையா.